# ஆழ்வார்கள் வரலாறு

அருளியது
ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்
டாக்டர் திரு. R.P. உருத்திரமணி M.A., Ph.D.,








வெளியிடுவோர்
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்
சிவானந்தா ஆஸ்ரமம்
சுவாமி சிவானந்தா சாலை
இராசிபுரம் :: சேலம் மாவட்டம்

விலை] 1996 [ரூ. 15.00

தமிழ் வெளியீடு - 95



Translated into Tamil
**"Lives of ALWARS"**
from "Lives of Saints"

Printed out of the magnanimous donation of :-
**SRI. A. MURALIDHARAN**
Computer Research Consultant
NEW JERCY. U.S.A

TYPESET BY : PRINT SHOP, MADURAI.
PRINTED AT : THE ORIENT LITHO PRESS, SIVAKASI.

# பொருளடக்கம்

4

# ஆழ்வார்கள் வரலாறு

## "LIVES OF ALWARS"

### ஆழ்வார்கள்; தென்னிந்திய வைஷ்ணவ ஆச்சாரியார்கள்

### முன்னுரை

அறத்திற்கு அழிவு நேரும் போதும், மக்கள் நாத்திகர்களாக அறத்திற்கு மாறுபட்டவர்களாக ஆகும் போதும் மக்களை ஆன்மீக நெறிக்குக் கைதூக்கி விடுவதன் பொருட்டு சிறந்த ஞானிகள் அவதாரம் செய்கின்றனர். இத்தகைய நெருக்கடியிலிருந்து மக்களைக் காப்பாற்று வதற்காகத் தென்னிந்தியாவில் ஆழ்வார்கள் அவதரித்தனர்.

ஆழ்வார்கள் தென்னிந்தியாவில் வைஷ்ணவ ஆச்சாரியர்கள். தென்னிந்தியாவிற்கு அவர்கள் ஒரு களஞ்சியம். அவர்களின் வாழ்க்கை வரலாறுகள் அவர்களின் பளிங்கு போன்ற தூய்மைக்கும், தங்களின் கடவுளாகிய நாராயண பகவானிடம் அவர்கள் கொண்டிருந்த ஆழ்ந்த நம்பிக்கைக்கும் சான்றாக விளங்குகின்றன.

தென்னிந்தியாவில் பக்திச் சுடரை ஆழ்வார்கள் மீண்டும் தூண்டிவிட்டனர். பாகவத சம்பிரதாயத்தின் பக்திக் கோட்பாடு அவர்களுடன் மறுமலர்ச்சி பெற்றது. ஆழ்வார்களின் வருகை, பக்தி இயக்கத்துக்கு ஒரு புதிய ஒளியை, ஒரு புதிய பொலிவை, ஒரு புதிய உணர்ச்சியை, ஒரு புதிய சக்தியை, ஒரு புதிய வாழ்வைக் கொடுத்தது. ஆழ்வார்கள் எந்நேரமும் கடவுளில் ஆழ்ந்திருந்தனர். அவர்களின் வாழ்க்கை இடையறாத தியான ஒழுக்கு

ஆகவும் தெய்வீகத் தொடர்புடையதாகவும் இருந்தது. பகவான் ஹரியின் புகழை அவர்கள் எந்நேரமும் பாடினர். நாராயணா, இராமா, கிருஷ்ணா, அச்சுதா, கோவிந்தா, மாதவா என்ற திருநாமங்கள் அவர்களுடைய உதடுகளில் எந்நேரமும் ஒலித்துக் கொண்டிருந்தன. எல்லா இடங்களிலும் ஆண்டவனுடைய இருப்பை அவர்கள் உணர்ந்தனர். அவர்கள் கடவுள் பக்தி என்னும் யோகத்தை ஏறிய ஞானிகள். அவர்களுடைய நிலையைச் சொற்களால் விவரிக்க இயலாது. அவர்களின் பெருமை வருணனைக்கு அப்பாற்பட்டது. இறைவனுடைய தாமரைத் திருவடிகளில் அவர்களுடைய மனம் எப்போதும் பதிந்திருந்தது. அவர்களின் இதயம் பகவான் ஹரியின் புனித உறைவிடமாக இருந்தது. அவர்களுடன் இறைவன் எப்போதும் விளையாடினான், உரையாடினான், வாழ்ந்தான். பக்தி, அன்பு, இரக்கம் என்னும் பண்புகளின் உருவமாக ஆழ்வார்கள் விளங்கினார்கள். தங்களோடு தொடர்பு கொண்டவர்கள் அனைவரையும் அவர்கள் மாற்றினார்கள்.

ஆழ்வார்கள் எல்லாச் சமூகங்களிலிருந்தும் தோன்றினார்கள். நால்வர் வைதிக அந்தணர்கள்; இருவர் அந்தணரல்லாதவர்கள்; ஒருவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் ; ஒருவர் பெண் ; நால்வர் "அயோனிஜர்"கள்; அதாவது கருப்பையில் பிறவாதவர்கள்; ஒருவர் க்ஷத்திரியர், முதலாழ்வார்களாகிய பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் பிறந்த ஊர்களைத் தவிர அவர்களைப் பற்றி எதுவும் தெரியவில்லை.

வைணவ ஞானியர் எண்ணிக்கையில் பன்னிருவர் அவர்கள் ஆழ்வார்கள் என்று அழைக்கப்படுகின்றனர்; ஏனெனில் அவர்கள் எப்போதும் கடவுள் பக்தியில் ஆழ்ந்திருந்தனர். பகவான் ஹரி தம்முடைய ஸ்ரீவத்சம், கௌஸ்துபம், வைஜயந்தி, வனமாலை, ஸ்ரீதேவி, பூதேவி, நீலதேவி, அனந்தன், கருடன், சுதர்சனம், பாஞ்ச ஜன்னியம், சார்ங்கம் ஆகியோரைப் பக்தியைப் பரப்பவும், மக்களை

அறியாமைத் தளையிலிருந்து விடுவிக்கவும் பன்னிரு ஆழ்வார்களாக அனுப்பினார் என்று வைணவ மத நூல்கள் கூறுகின்றன.

வைணவம் இந்து மதத்தில் மிகவும் முக்கியமான ஒரு ஜீவாதாரக் கொள்கையாகும். அதற்கு மதிப்பு மிகுந்த வரலாறு உள்ளது. அது இந்தியாவில் இன்னும் செல்வாக்குடன், பின்பற்றுவோரை மிகுதியாகக் கொண்டு விளங்குகின்றது. தென்னிந்தியாவில் பன்னெடுங்காலமாக அது பரவி வளர்ந்து செல்வாக்கைப் பெற்றுள்ளது. பல்லவ அரசர்களும் சோழ மன்னர்களும் ஆதிக்கமும் புகழும் பெற்று விளங்குவதற்கு முன்பே மூத்த ஆழ்வார்கள் வளர்ச்சி பெற்றுத் திகழ்ந்தனர்.

துவாபர யுகத்தின் முடிவில் பொய்கை ஆழ்வாரும், பூதத்தாழ்வாரும், பேயாழ்வாரும், திருமழிசை ஆழ்வாரும் பிறந்தனர். ஏனைய ஆழ்வார்கள் எண்மரும் இக் கலியுகத்தில் பிறந்தனர். கி.பி. நான்காம் நூற்றாண்டுக்கும் எட்டாம் நூற்றாண்டுக்கும் இடையே அவர்கள் வாழ்ந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

ஆழ்வார்கள் பாடியுள்ள பாசுரங்கள் "நாலாயிர திவ்வியப் பிரபந்தம்" என்ற பெயருடன் புகழ்பெற்று விளங்குகின்றன; இதில் நான்காயிரம் பாடல்கள் அடங்கியுள்ளன. அருள் ஞானி நாதமுனிகளால் இவை தொகுக்கப்பட்டன. இவை ஆழ்வார்களின் இதயங்களில் இருந்து பொங்கி எழுந்த பாடல்களாகும். "நாலாயிர திவ்வியப்பிரபந்தம்" புனிதம் நிறைந்த தெய்வீக ஞானக் களஞ்சியம். அது, வேத, இதிகாச, புராணங்களின் முக்கிய சாரத்தை, மனத்தைக் கவரும் வடிவில் கொண்டுள்ளது. ஒவ்வொரு பாசுரத்திலும், கொழுந்து விட்டெரியும் பக்தியின் ஆர்வம் உயிர்மூச்சாக வெளிப்படுகின்றது.

"திவ்வியப் பிரபந்த"ப் பாசுரங்களுக்குப் பல உரைகள் எழுந்துள்ளன. திருக்குருகைப் பிரானின் வியாக்கியானங்கள்

"ஆறாயிரப்படி" எனப்படும்; நஞ்ஜீயரின் வியாக்கியானங்கள்" பத்தாயிரப்படி" எனப்படும்; அழகிய மணவாள ஜீயரின் வியாக்கியானங்கள் "பன்னீராயிரப்படி எனப்படும்; பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்கள்" இருபத்து நான்காயிரப்படி" எனப்படும்; நஞ்ஜீயரின் சீடர் நம்பிள்ளையின் வியாக்கியானங்கள்" முப்பத்தாறாயிரப்படி" எனப்படும்.

தற்காலத்தில் வழக்கில் இல்லாத, கொல்லி, குறிஞ்சி, தக்கேசி முதலிய ப்ழங்காலப் பண்களில் வைணவப் பாசுரங்கள் பாடப்பட்டன. இக்காலத்தில் அவை நவீன, கர்நாடக இசை இராகங்களில் பாடப்படுகின்றன.

ஆழ்வார்கள் திருவாய் மலர்ந்தருளிய "திவ்வியப் பிரபந்தத் திரட்டில் உள்ள திருவாய் மொழிப் பாசுரங்கள்" வைணவர்களின் இல்லங்களிலும் கோயில்களிலும் அனை வரும் சேர்ந்து பாடும் கூட்டிசையாகப் பாடப்படுகின்றன.

# 1. முற்கால ஆழ்வார்கள் மூவர்

பொய்கை ஆழ்வாரும் (சரோ யோகி) பூதத் தாழ்வாரும், பேயாழ்வாரும் மிகவும் தொன்மை வாய்ந்த மூன்று ஆழ்வார்கள். அவர்கள் பிறவி ஞானிகள். அவர்கள் "ஆழ்வார்களின் முன்னோடிகள்" என்று அழைக்கப்படு கின்றனர். ஏறத்தாழ 5,500 ஆண்டுகட்கு முன்பு, துவாபரயுகத்தின் 862962-ம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் பொய்கை ஆழ்வார் பிறந்தார். அடுத்த நாள் திருக்கடல் மல்லையில், இக்காலத்து மகாபலிபுரத்தில், பூதத்தாழ்வார் பிறந்தார். அடுத்த நாள் மாமயிலையில், இக்காலத்து மைலாப்பூரில், பேயாழ்வார் பிறந்தார்.

பொய்கை ஆழ்வார், ஹரி பகவானின் சங்கிய பாஞ்சஜன்னியத்தின் அவதாரமாக மதிக்கப்படுகின்றார். பூதத்தாழ்வார் பகவானுடைய கதை ஆயுதத்தின் அவதாரமாகக் மதிக்கப்படுகின்றார். பேயாழ்வார் பகவானுடைய நாந்தகம் என்னும் வாட்படையின் அவதாரமாக மதிக்கப்படுகின்றார்.

இந்த ஆழ்வார்கள் மூவருடைய இளம் பிராய வாழ்க்கையைப்பற்றியும் அவர்கள் செய்த சாதனைப் பயிற்சிகளைப்பற்றியும் நமக்கு எதுவும் தெரியவில்லை. தென் ஆற்காடு மாவட்டத்தில் தென் பெண்ணை ஆற்றங் கரையில் உள்ள திருக்கோஷ்டியூரில் எதிர்பாராத வகையில் இம்மூவரும் ஒருவரையொருவர் சந்தித்த போது அவர்களின் பெரும்புகழ் புலனாயிற்று. பொய்கை ஆழ்வார் கோயிலு பகவானை வழிபட்டார். அப்போது புயல் வீசும் காரிருள் இருந்தது; மழை பெய்ததுஒரு பக்தருடைய வீட்டின் குறுகிய திண்ணையில் அவர் ஒதுங்கினார். அவர் தியானம் செய்து கொண்டிருந்தார். சில நிமிடங்களுக்குப் பிறகு பூதத்தாழ்வார் அங்கே வந்து,"இங்கே வாழ்பவர் யார்? நான் தங்க இடம் உண்டா?" என்று வினவினார். பொய்கை ஆழ்வார்,"ஆம் இடம் உள்ளது. ஒருவர் படுக்கலாம்; இருவர் அமரலாம்"

என்று விடை கூறினார். பூதத்தாழ்வார், "அப்படியானால் சரி, இருவரும் அமர்ந்து கொள்வோம்" என்று கூறினார். அவர் சேர்த்துக் கொள்ளப்பட்டார். இருவரும் அமர்ந்து இறைவனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது பேயாழ்வார் வந்து"இங்கே தங்குவதற்கு எனக்கு இடம் ஏதும் உண்டோ?" என்று வினவினார், பொய்கை ஆழ்வார். " ஒருவர் இங்கே படுக்கலாம்; இருவர் அமரலாம்; மூவர் நிற்கலாம்", என்று தெரிவித்தார், பேயாழ்வார், "அப்படியானால் சரி, நாம் நிற்போம்" என்று கூறினார். அவரும் சேர்த்துக் கொள்ளப்பட்டார். மூவரும் திண்ணையில் நின்று கொண்டு பகவான் ஹரியைத் தியானம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் நடுவில் யாரோ இருந்து கொண்டு மிகவும் நெருக்குவது போல உணர்ந்தனர். அப்படி ஊடே புகுந்தவர் வேறு யாரும் அல்ல, பகவான் ஹரிதான் அவர். திருக்கோஷ்டியூரின் திரிவிக்கிரமக் கடவுள் அங்கே சென்று அவர்களை நெருக்கினார். தங்கள் தியானத்தாலும் இறைவனின் அருளாலும் புதிதாக வந்தவர் யார் என்று ஆழ்வார்கள் அறிந்து கொண்டார்கள். விஷ்ணு பகவானை அவர்கள் கண்டார்கள்.

ஆழ்வார்கள் மூவரும் இன்ப வெள்ளத்தில் மூழ்கினர். முடிவற்ற மகிழ்ச்சியை அடைந்தனர். அவர்கள் பகவானுடைய கமல பாதங்களில் சரணடைந்து அவருடைய புகழ்களைப் பாடும் மகிழ்ச்சியை வேண்டினர். அவர்களுடைய வேண்டுகோள் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அப்போதே அங்கேயே ஒவ்வொரு ஆழ்வாரும் பகவான் ஹரியின் புகழ்களைப் பற்றிய செவிக்கினிய நேர்த்தியான நூறு பாசுரங்களைப் பாடிப் படையலாகப் படைத்தனர்.

பொய்கை ஆழ்வார் ஞானத்தை மிகவும் வலியுறுத்தினார். பூதத்தாழ்வார் பக்தியையும், பேயாழ்வார் துறவையும் வலியுறுத்தினார்கள். அவர்கள் மெய்யுணர்வு பெற்று இன்றியமையாத ஒரே உண்மைகளை நவின்றனர். சிவபெருமானைப் பற்றிக் குறைவாக அவர்கள் ஒருபோதும்

உணரவுமில்லை; பேசவுமில்லை. அவர்கள் உண்மையை உணர்ந்து சிவபெருமானுக்கும் விஷ்ணுபகவானுக்கும் உள்ள அடிப்படை ஒற்றுமையைப் பாடினர். பிற்காலத்து மதவெறி கொண்ட வியாக்கியான உரைகாரர்களைக் காட்டிலும் அவர்கள் மிக மிக மேலானவர்கள்.

மூத்த ஆழ்வார்களாகிய இம்மூவரும் பாடிய பாசுரங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு"அந்தாதிகள்" என்று வழங்கப்படுகின்றன. அந்தாதியில் ஒரு பாடலின் இறுதிச் சொல், அடுத்து வரும் பாடலின் முதற் சொல்லாக அமைகிறது.

மூத்த ஆழ்வார்கள் சைவ சமயத்தின் பால் பரந்தமனப்பான்மை காட்டினர். பொய்கை ஆழ்வார், கடவுள் ஒருவர் தான் இருக்கிறார் என்றும், அவருக்குச் சிவன், ஹரி என்று வெவ்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன என்றும், அவருடைய வாகனம் எருது அல்லது கருடன் என்றும், அவருடைய செயல் அழிப்பது அல்லது காப்பது என்றும் கூறுகின்றார். பரம்பொருள், அறன் என்றும் நாராயணன் என்றும் இரு வடிவங்களில் தோன்றினாலும் ஒன்றே ஒன்று தான் என்றும் அவர் கூறுகின்றார். இறைவனை வேங்கடமலையில் தாம் கண்டதாகவும், விரிந்த சடாமுடியும் சூலபாணியாகச் சிவனாகவும், மகுடத்துடன் சக்தரதாரியாக ஹரியாகவும் அவர் காட்சி தந்தார் என்றும் பேயாழ்வார் கூடத் தெரிவிக்கின்றார்.

இந்த மூத்த ஆழ்வார்களின் அறிவுரை, "பொறிகளை அடக்கு. பக்தர்களின் சத்சங்கத்தில் தங்கி இரு. நாராயண பகவானிடத்தில் முற்றிலும் சரணாகதி அடை. அவனுடை நாமத்தை எப்போதும் உச்சரி. அவனை வழிபடு. அவனைக் குறித்துத் தியானம் செய். அவனுடைய புகழைப் பாடு. மூவுலகங்களுக்கும் அவன் இறைவன். அவன் உனக்கு ஆதாரம்; புகலிடம், அவனுடைய அருளைப் பெறு. பேரின்பத்தையும் அமரத்துவத்தையும் நீ அடைவாய். அவனுடைய அருள் தான் உன்னைக் காப்பாற்ற முடியும். அவன் உன் உள்ளத்தில் உறைகின்றான்"; என்பதாம்.

## 2. பெரியாழ்வார்

"பெரியாழ்வார்" என்ற சொல், "பெருமை மிகு ஆழ்வார்" என்று பொருள்படும். அவருடைய மனம் எப்போதும் விஷ்ணு பகவானிடத்தில் மூழ்கி இருந்தமையினால் விஷ்ணு சித்தர் என்ற பெயரும் அவருக்கு உண்டு.

தென்னிந்திய வைணவ ஆழ்வார்கள் அனைவரும் நம்மாழ்வாரின் உடம்பாகவும் உறுப்புக்களாகவும் அமைந்துள்ளனர். பெரியாழ்வார் தலையாக அமைந்துள்ளார்? ஆழ்வார்கள் ஆண்டவனிடம் ஞானமும் பக்தியும் அருளுமாறு வேண்டினர்; ஆனால், பெரியாழ்வார் பகவானிடம் வாத்சல்ய பாவம் கொண்டிருந்தமையால், பகவான் நலமாக இருக்க வேண்டும் என்று பெரிதும் கவலை கொண்டிருந்தார்; பகவானை,

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு"

என்று பாடி வாழ்த்தினார், நல்லாசிகள் வழங்கினார். எனவே பெரியாழ்வாருக்கு உன்னதமான இடம் வழங்கப்பட்டுள்ளது.

திருநெல்வேலி மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூரில் முகுந்தாச்சாரி என்ற பக்தி மிகுந்த அந்தணர், பக்தியும் கற்பும் உள்ள தம் மனைவி பத்மாவுடன் வாழ்ந்தார். தமக்கொரு புதல்வன் வேண்டும் என்று அவர் நாள்தோறும் பகவானிடம் வேண்டி வந்தார். அவருடைய வேண்டுகோள் நிறைவேறியது. பெரியாழ்வாராகிய விஷ்ணு சித்தர் பிறந்தார். பகவான் ஹரியின் வாகனமாகிய 'கருடனின் அவதாரம்" என்று அவர் மதிக்கப்படுகிறார்.

பெரியாழ்வார் உள்ளூரில் இருந்த கோயிலில் வாழ்ந்தார்; பகவான் ஹரியை எப்போதும் தியானம் செய்து வந்தார். அவருக்கு அழகான ஒரு பூந்தோட்டம் இருந்தது. அவர் நாள்தோறும் மலர்களைப் பறித்து வந்து மாலைகள் தொடுத்துக் கோயிலில் எழுந்தருளியுள்ள பகவான் வடபத்திரசாயிக்கு அணிவித்து வந்தார். மக்கள் பலருக்கு அவர் பாகவதத்தை விளக்கி விரிவுரை கூறினார். அவர் சிறந்த வடமொழி அறிஞர்.

தமிழ்நாட்டின் திருநெல்வேலி, மதுரை மாவட்டங் களடங்கிய பாண்டிய நாட்டை அப்போது ஸ்ரீ வல்லப தேவன் என்ற பாண்டிய மன்னன் ஆண்டு வந்தான். மதுரையில் அவனுடைய அரசவை இருந்தது. காசியிலிருந்து இராமேஸ்வரத்திற்குச் சென்று கொண்டிருந்த கற்றறிந்த ஓர் அந்தண யாத்திரிகரை அவன் சந்தித்தான்.

மன்னன், "நீங்கள் கற்றறிந்த அந்தணர். உங்கள் அனுபவத்திலிருந்து எனக்கு ஓர் உண்மையைக் கூறுங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

அந்தணர், "நான் சொல்வதைக் கூர்ந்து கவனத்துடன் கேளுங்கள். மழைக் காலத்துக்கு வேண்டிய பலசரக்குப் பொருள்களை ஆண்டின் மற்ற எட்டு மாதங்களில் தேடிக் கொள்ள வேண்டும். இரவு காலத்திற்கு வேண்டிய பொருள்களை எல்லாம் பகற்காலத்தில் தேடி வைத்துக் கொள்ள வேண்டும். மூப்படைந்த காலத்துக்கு வேண்டிய வற்றை இளமைக்காலத்தில் தேடி வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறே ஒருவன் பேரின்பத்தையும் அமரத்து வத்தையும் தரவல்ல நல்ல புண்ணியங்களை இந்தப் பிறப்பிலேயே சம்பாதித்துக் கொள்ள வேண்டும்", என்று விளக்கினார்.

மன்னன் தன் தலைமை குருவாகிய செல்வ நம்பியை அழைத்து, "மெய்யுணர்வு பெற எனக்கு உறுதியான ஆர்வம்

உள்ளது. இதை நான் எவ்வாறு பெற முடியும்?" என்று வினவினான்.

மதகுரு, "சமயங்களின் மாநாடு ஒன்றை நடத்த வேண்டும். அருளாளர்களும் சிறந்த யோகிகளும் ஆகிய அனைவரும் கூடுவார்கள். தகுதி வாய்ந்தவருக்குப் பரிசுகள் பலவற்றை வழங்க வேண்டும். அவர்களுடைய மதிக்கத்தக்க போதனைகளை நீ கேட்கலாம். அவர்களுடைய சத்சங்கத்தில் நீ வாழலாம்; அவர்களுடைய அறிவுரைகளை நீ பின்பற்றலாம்; என்று தெரிவித்தார்.

மதகுருவின் திட்டங்களுக்கு மன்னன் இசைவு தெரிவித்தான். சமயங்களின் மாநாடு நடைபெறுவதைப் பற்றி நாடெங்கும் தகுந்த விளம்பரம் செய்யப்பட்டது. வாதங்களில் வெற்றி பெறுபவருக்கு ஒரு பெரிய பொற்கிழி வழங்கவும் முடிவு செய்யப்பட்டது.

சமயங்களின் மாநாடு மதுரையில் நடைபெற்றது. நாட்டில் உள்ள ஒவ்வொரு மதத்தைச் சார்ந்த அறிஞர்களும் மாநாட்டிற்கு வருகை புரிந்தனர். வைணவர்கள், சைவர்கள், சாக்தர்கள், சமணர்கள், பௌத்தர்கள், பாசுபதத்தவர்கள் ஆகிய அனைவரும் தனிச்சிறப்புமிக்க இந்த நேரத்தில் வந்திருந்தனர். உரத்த வாதங்கள் நடைபெறலாயின. யாரும் அரசனைத் திருப்திப்படுத்த முடியவில்லை.

விஷ்ணுசித்தரின் கனவில் ஹரிபகவான் தோன்றி," விஷ்ணு சித்தா! விழித்தெழு. மதுரைக்கு உடனே புறப்படு. அரசனுடைய ஆதரவில் அங்கே சமயங்களின் பெரிய மாநாடு நடந்து கொண்டிருக்கிறது. மாநாட்டில் நீ பங்கு கொள். முழு வெற்றியும் உனக்கே என்று உறுதி தருகின்றேன், ஹரி பகவானிடம் பக்தி செலுத்துக! என்ற செய்தியை மன்னனுக்கும் மக்களுக்கும் வழங்கு", என்று பணித்தார்.

விஷ்ணுசித்தர் மாநாட்டில் கலந்து கொண்டு முக்கியப் பங்கு வகித்தார். மன்னன் அவரை வரவேற்றுத் தகுந்த மரியாதைகளை வழங்கினான். அறிஞர்கள் தொடுத்த வினாக்கள் எல்லாவற்றுக்கும் விஷ்ணுசித்தர் விடையளித்தார். அவர், "ஹரி பகவான் முதற்கடவுள், அவர் மிக உயர்ந்த உண்மை. அவர் காக்கும் கடவுள். அவரிடமே சரண் அடைக. முழுமையான, நிபந்தனையற்ற, மனம் உவந்த, தானாக முன் வந்த சரணாகதி அடைக. "ஓம் நமோ நாராயணாய" என்ற அவருடைய மந்திரத்தை உச்சரி. அவருடைய அருளைப் பெறு, அவர் உன்னை விடுவிப்பார். அவர் உனக்கு அமரத்துவத்தை வழங்குவார். நிலைத்த பேரின்பத்தையும் பரம சாந்தியையும் அவர் உனக்கு வழங்குவார். அவருடைய அருளால்தான் நீ மாயையை வெல்ல முடியும், அனைவருடைய உள்ளங்களிலும் அவர் உறைகின்றார், அவர் எங்கும் வியாபித்துள்ளார். அவர் நிறை கருணையுள்ளவர். அவர் முடிவற்றவர், அவருடைய புகழைப்பாடு, அவருடைய நாமத்தை ஜெபம் செய். அவரை வணங்கு. அவருடைய கமலபாதங்களை எப்போதும் பற்றிக் கொண்டிரு", என்று அறிவித்தார்.

அப்போது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. உயரமான இடத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த பொற்கிழி அவிழ்ந்து விஷ்ணு சித்தரின் காலடியில் தானாகவே வந்து விழுந்தது. மன்னன் மிகுந்த மன நிறைவைப் பெற்றான். அவன் பெரும் அளவு திருப்தியடைந்தான்.

மன்னன் பெரியாழ்வாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்; அவரைத் தன் ஆன்மீகக் குருவாக ஏற்றுக் கொண்டான். மதுரையில் தெருக்கள் வழியாக ஆழ்வார் யானையின் மீது அமர்ந்து ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். திடீரென்று ஆழ்வார் விண்ணில் ஒரு திருக்காட்சியைக் கண்டார். பகவான் ஹரி தம் பிராட்டியாகிய இலக்குமி தேவியுடன் கருடவாகனத்தில் எழுந்தருளி ஊர்வலத்தைக் காணத் தென்பட்டார்.

யானையின் இருபுறம் தொங்கவிடப்பட்டிருந்த இரண்டு மணிகளைப் பெரியாழ்வார் எடுத்துக் கொண்டு அவற்றை ஜாலராக்களாகப் பயன்படுத்திப் பாடத் தொடங்கினார். அந்தக் கணத்தில் அவருக்கு வாத்சல்ய பாவம் ஏற்பட்டது. அவர் பகவானைத் தம் குழந்தையாகப் பாவித்தார். அவர் புனைந்த பாடல் "பல்லாண்டு" என்று அழைக்கப்படுகிறது; அதன் பொருள் "பல ஆண்டுகள்" என்பதாம். இது உணர்ச்சி மிக்க பாசுரம். வைணவர்கள் தங்கள் இல்லங்களிலும் கோயில்களிலும் இப்பாசுரத்தைப் பாடுகின்றனர்.

இப்பாசுரத்தின் பொருள் தெளிவாக விளங்கும் :

"பல்லாண்டு! பல்லாண்டு! பல்லாயிரத்து ஆண்டு!
பல்கோடி நூறாயிரம்!
மல்லாண்ட திண்தோள் மணி வண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு :
அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு!
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு!
வடிவார் சோதி வலத்துறையும்
சுடர் ஆழியும் பல்லாண்டு!
படைப் போர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே!

தொண்டர்காள் வம்மின்! "ஓம் நமோ நாராயணாய" என்ற பாடலைப் பாடுமின், பகவானின் கமலபாதங்களைத் தொழுமின். பகவானுக்குப் பல்லாயிரத்தாண்டு! நம் குடும்பத்தார் அனைவரும், நம் மூதாதையர் அனைவரும், நம் பரம்பரையில் இனி வருவோர் அனைவரும் அவனுக்கே வழி வழி அடியார்கள். அவன் நம்மைத் தூய்மைப்படுத்து வான். அவன் நம்மைக் காப்பான்."

"பகவானே! ஐந்துதலை நாகத்தின் தலையின் மீது நர்த்தனம் செய்தவனே! பல்லாயிரத்தாண்டு! நான் உன்

பணிவுள்ள சேவகன். நீ அணிந்த மஞ்சள் பீதாம்பரத்தை நான் அணிகின்றேன். நீ உண்டு மிஞ்சிய மிச்சில் மிசைகின்றேன். அது உன் பிரசாதம். நீ அணிந்த துளசி மாலையை என் சிரசின் மீது சூடுகின்றேன். உன் பணி செய்வது என் கடன், உனது நோக்கத்தை நிறைவேற்ற வாழ் கின்றேன். உன் வரலாற்றையும், உனது திருநாம மகிமையை யும் பரப்பவே நான் வாழ்கிறேன்; நான் உன் பக்தன். நான் உன் பணியாள், நான் எந்நேரமும் "ஓம் நமோ நாராயணாய" என்ற உன் மந்திரத்தை உச்சரிக்கின்றேன். பகவானே! உனக்குப் பல்லாயிரத் தாண்டு".

பெரியாழ்வார் நமக்கு இரண்டு பாசுர நூல்களை வழங்கியுள்ளார். முதலாவது "பல்லாண்டு" என்ற பன்னிரண்டு பாடல்கள். இரண்டாவது "பெரியாழ்வார் திருமொழி" என்ற தொகுதி; இதில் நானூற்று அறுபத்தி ஒன்று, அழகிய செவிக்கினிய மணங்கமழும் பாடல்கள் அடங்கியுள்ளன. ஆழ்வார்கள் அனைவரும் பாடிய பாடல்கள் உள்ள தொகுதியில் 'பல்லாண்டு' முதன்மை வாய்ந்த முதலிடம் தரப்பட்டுள்ளது. வேதங்களுக்குப் 'பிரணவம்' அமைந்துள்ளது போன்று, ஆழ்வார்களின் பாசுரங்களுக்குப் "பல்லாண்டு" அமைந்துள்ளது.

"பெரியாழ்வார் திருமொழி" கண்ணபிரானின் லீலைகளைப் பற்றிப் பேசுகின்றது. பாகவதத்தின் சாரம் இதில் அடங்கியுள்ளது.

பெரியாழ்வார், பகவான் ஹரியை நினைக்காத மக்கள் பிறக்க வேண்டியதில்லை ஏற்கனவே பிறந்திருந்தால் அவர்கள் தங்களின் பெற்றோர்களுக்கு அவமானத்தை உண்டாக்குகின்றார்கள். இறைவனுடைய திருநாமத்தை உச்சரிக்காதவர்கள் பாவத்தை உண்கிறார்கள்; பருகுகின்றார்கள். அவர்கள் வீணே வாழ்கின்றனர்" என்று முழங்குகிறார்.

பெரியாழ்வார் வாத்சல்ய பாவம் கொண்டிருந்தார். அவர் கண்ணபிரானைத் தம் மகனைப் போலச் சீராட்டினார். அவர், "குழந்தாய்! அழாதே. என் இதயமாகிய தங்கத் தூளியில் அமைதியாக உறங்கு. இந்த வெண்ணெயையும் பலகாரத்தையும் அருந்து. இனியவனே! ஏன் குறும்பு செய்கின்றாய்? கோபியருக்கும் உன் அன்னைக்கும் தொந்தரவு தராதே. நல்ல, அமைதியுள்ள குழந்தையாக ஆவாய். கோபியர் உன்னைப் பற்றி மிகவும் குறை கூறுகின்றனர். அவர்கள் தங்களின் இல்லங்களிலிருந்து வெளியே சென்றபோது நீ அவர்கள் வைத்திருந்த பாலைக் குடித்துவிட்டாய். நீ திருட்டுத்தனமாக வெண்ணெயை எடுத்துக் கொண்டாய். நாளை நீ காட்டுக்குப் போகாதே. இங்கே என்னுடன் இரு. உன் கால்கள் மிகவும் வலிக்கும். அவை மிகவும் மிருதுவானவை.

இப்போது என் இனிய குழந்தை குழல் வாசிக்கிறான். செவிக்கு அது எவ்வளவு இனிமையாக இருக்கிறது! அது உள்ளத்திற்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டுகிறது. அது அமிழ்தினும் இனியது. அவனுடைய குழலிசையைக் கேட்கும்போது பசுக்களும் மற்ற விலங்குகளும் சிலைகள் போல் நிற்கின்றன", என்று கூறினார்.

பெரியாழ்வார் தம் 85-ம் வயதில், மதுரைக்கு அருகில் உள்ள அழகர் கோயிலில் உயிர் துறந்தார்.

ஆழ்வார்களுக்கெல்லாம் மணி முடியாக விளங்கும் பெரியாழ்வாரின் புகழ் ஓங்குக! அவருடைய நல்லாசிகள் நம் அனைவர் மீதும் பொழிவனவாகுக!

## 3. நம்மாழ்வார்

நம்மாழ்வார் முதன்மையும் பெருமையும் வாய்ந்த ஞானி; கவிஞர். ஆழ்வார்களில் அவர் மிகச் சிறந்த பெருமைக் குரியவர். 'நம்மாழ்வார்' என்றால், "நம்முடைய ஆழ்வார்" என்று பொருள். சடகோபர், வகுளாபரணர் என்ற பெயர்களும் அவருக்கு உண்டு. நம்மாழ்வார் என்னும் பெயர் அனைவரும் அறிந்த பெயராகும்.

கலியுகம் பிறந்த 43ம் ஆண்டாகிய பிரமாதி ஆண்டு வைகாசி மாதம் பௌர்ணமி நாளன்று, வெள்ளிக் கிழமை திருநெல்வேலி மாவட்டம் தாமிரபரணி ஆற்றின் கரையில் தற்போது "ஆழ்வார் திருநகரி" என்றழைக்கப்படும் திருக் குருகூரில் நம்மாழ்வார் பிறந்தார் என்று மரபு வழிச் செய்தி கூறுகின்றது.

கரிமாரன் அல்லது காரியார் என்பவருக்கும் உதய நங்கையாருக்கும் நம்மாழ்வார் பிறந்தார். காரியார் வேளாளப் பிள்ளை. அவருடைய முன்னோர்கள் அனைவரும் ஹரிபகவானின் பக்தர்கள். இளமையிலேயே காரியாருக்கும் உதய நங்கையாருக்கும் திருமணம் நடந்தது. இந்த அம்மையார், மேற்குத் தொடர்ச்சி மலையின் மறுபக்கத்தில் உள்ள திருவன்பரிகாரன் என்று கிராமத்தின் வைஷ்ணவ ஸ்தானிகரின் புதல்வி. அவர் கற்புக் கரசி. நம்மாழ்வாருக்கு மாறன், சேனாம்சர் என்ற பெயர்கள் இருந்தன.

காரியாருக்கும் உதய நங்கையாருக்கும் நீண்ட காலமாக மகப்பேறு வாய்க்கவில்லை. குழந்தைப் பேற்றுக்காக அவர்கள் கடுமையான தவங்களைச் செய்தனர். ஒரு முறை அவர்கள் திருவன்பரிகாரனுக்குச் சென்று விட்டுத் திரும்பும் போது, வழியில் திருக்குறுங்குடி என்ற ஊரில் இருந்த வைஷ்ணவத் திருக்கோயிலில் உள்ள தெய்வத்தினிடம் குழந்தை வரம் வேண்டினர். ஆண் குழந்தையைப் பெற விரும்பினர். அவர்களுடைய வேண்டுகோள் கேட்கப்பட்டு

வரம் வழங்கப்பட்டது. அவர்களுக்கு ஒரு தெய்வீகக் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையே மாறன் அல்லது நம்மாழ்வார்.

குழந்தை அதிசயம் நிறைந்ததாக இருந்தது. அது தன் கண்களைத் திறக்கவில்லை; அழவும் இல்லை; தாயின் பாலைக் குடிக்கவும் இல்லை. பகவான் ஹரியும் இலக்குமிதேவியும் தங்களின் வைகுந்தப் பேரின்ப வீட்டிலிருந்து திருக்குறுங்குடிக்கே இறங்கிவந்து மாறனை வாழ்த்தினர்; ஆசி வழங்கினர்.

பெற்றோர்கள் குழந்தையைப் பிறந்த பன்னிரண்டாம் நாள், ஆற்றின் கரையில் இருந்த வைஷ்ணவக் கோயிலுக்கு எடுத்துச் சென்றனர். பக்கத்தில் இருந்த ஒரு புளிய மரத்தில் தொட்டில் கட்டி அதில் குழந்தையை இட்டனர். உணவும் இன்றி, நீரும் இன்றிப் பதினாறு ஆண்டுகள் குழந்தை வாழ்ந்து வந்தது. உயர் நலம் மிக்க ஆன்மீக உண்மைகளைக் குழந்தைக்குப் போதிப்பதற்காகப் பகவான் தம் தூதுவர்களை அனுப்பினார். அமர்ந்திருக்கச் செய்தால் குழந்தை அமர்ந்திருந்தது. நிற்க வைத்தால் தன் கால்களை ஊன்றி நின்றது. படுக்க வைத்தால் அமைதியாகப் படுத்துக் கொண்டது.

இன்னொரு வரலாறு கூறுவதாவது : பெற்றோர்கள் உள்ளூர்க் கோயிலில் பகவான் ஹரியின் திருவடிகளில் குழந்தையை விட்டுச் சென்றார்கள். குழந்தை நேராகப் புளிய மரத்தை நோக்கி நடந்து சென்றது; அடிமரத்தில் இருந்த பொந்தினுள் நுழைந்தது; பத்மாசனத்தில் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டது; சமாதி நிலையை எட்டியது.

மதுரகவி என்ற அந்தணர் சோழ நாட்டில் உள்ள திருக்கோஷ்டியூரைச் சேர்ந்தவர். சிறு வயதிலேயே அவர் எல்லா வேதங்களையும் கலைஞானங்களையும் கற்றார். வட நாட்டில் உள்ள அயோத்தி முதலிய புண்ணியத் தலங்களுக்கு அவர் யாத்திரை சென்றார். ஒரு நாள் இரவில் தென் திசையில் ஓர் அதிசயமான சுடர்மிகுந்த சோதியை

அவர் கண்டார். அவர் பேராச்சரியத்துக்கு ஆளானார். சோதி, உதய ஞாயிறு போலப் பிரகாசமாக இருந்தது. அடுத்த நாள் இரவும் அதே சோதி தென்பட்டது. தொடர்ந்து மூன்று இரவுகள் அவர் அதைக் கண்டார். அதன் கருத்து என்னவென்று மதுரகவியால் தெரிந்து கொள்ள முடியவில்லை. தெற்கில் ஏதோ ஒரு பெரும் நிகழ்ச்சி நடந்துள்ளது என்று அவர் நினைத்தார். அவர் அந்த சோதியைப் பின்பற்றி தென்னாட்டிற்குப் பயணம் செய்தார். கடைசியாக, அவர் தாமிரபரணியாற்றின் கரையில் உள்ள திருக்குருகூரை அடைந்தார். அதிசய சோதி மறைந்தது.

இதனால், மதுரகவி ஊருக்குச் சென்று அங்கு ஏதேனும் அதிசயம் நடைபெற்றதா என்று மக்களை வினவினார். பல ஆண்டுகளுக்கு முன்பு பிறந்த அந்த அதிசயக் குழந்தை இப்போது, தாமிரபரணி ஆற்றின் கரையில் புளியமரத்தின் நிழலில் உள்ள தொட்டிலில் படுத்துக் கொண்டிருக்கிற தென்று அவர்கள் அவரிடம் தெரிவித்தார்கள். மதுரகவி ஆற்றின் கரையில் உள்ள இந்த இடத்துக்குச் சென்று மோன நிலையில் இருந்த மாறனைக் கண்டார். அவருக்குப் பெரும் ஆச்சரியம் ஏற்பட்டது. மாறனுக்கு உணர்வு உள்ளதா இல்லையா என்று தெரிந்து கொள்ள அவர் விரும்பினார். ஒரு பெரிய கல்லை எடுத்து மாறன் முன்னால் வீசினார். பதினாறு ஆண்டுகளாகக் கண்களை மூடியிருந்த மாறன் இப்போது கண்களைத் திறந்து பார்த்தார்.

மதுரகவி ஒரு புதிர் மிகுந்த தத்துவக் கேள்வியை மாறனிடம் கேட்டார்; "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால், அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" அதன் கருத்து," உணர்வற்ற சடம் ஆகிய உடம்பில் நுண்ணிய ஜீவன் பிறப்பெடுத்தால், அதற்கு எது உணவாகும்? அது எங்கே உறையும்?" மாறன், "அத்தைத்தின்று அங்கே கிடக்கும்" என்று விடை கூறினார். இதன் கருத்து, நுண்ணிய ஜீவன் தன்னை அடைத்துக் கொண்டுள்ள பிரகிருதியை உணவாகக் கொள்ளும். பிரகிருதியில்

இன்புற்றும் துன்புற்றும் அதில் தங்கி இருக்கும். அல்லது இறைவனாகிய பேரின்பத்தை அனுபவித்து அப்பேரின் பத்தில் தங்கி இருக்கும்".

நுட்பமும் ஞானமும் மிகுந்த விடையைக் கேட்டு மதுரகவி அது புகழ்ந்து பாராட்டத் தக்கதாக இருப்பதை உணர்ந்து மகிழ்ந்தார். அவர் தம் குருவின் பக்கத்தில் தங்கியிருக்கவும், அவருடைய திருவடிகளில் பணிவுடன் அமர்ந்து ஞானம் பயிலவும் முடிவு செய்தார். மாறன் உள்ளத்தை ஊக்கி உயர்த்தும் 'திருவிருத்தம்', "திருவாசிரியம்"; " பெரிய திருமொழி", "திருவாய் மொழி" ஆகிய பாசுரங்களைப் பாடினார். பாடல்கள் பாடப்பாட மதுரகவி அவற்றைக் கவனத்தோடு பனை ஓலைகளில் எழுதிவைத்தார்; நம்மாழ்வார் மறைந்த பின் அவற்றை வெளியிட்டார்.

இருக்கு வேதத்தின் சாரத்தைக் கொண்டுள்ளது "திருவிருத்தம்", யஜுர் வேதத்தின் சாரத்தைக் கொண்டுள்ளது "திருவாசிரியம்"; அதர்வ வேதத்தின் சாரத்தைக் கொண்டுள்ளது "பெரிய திருமொழி"; சாம வேதத்தின் சாரத்தைக் கொண்டுள்ளது"திருவாய்மொழி"; என்று பலரும் கருதுகின்றனர். இது தவறு. நம்மாழ்வாரின் நூல்களுக்கும் வேதங்களுக்கும் எந்த ஒற்றுமையும் இல்லை; ஒரேயொரு பொதுமை காணப்படுகின்றது; இறைவனைப் பற்றிய வருணனைகளும் மெய்ஞ்ஞானத்தை அடைவதற் குரிய வழிகளும், நம்மாழ்வாரின் நூல்களிலும் வேதங்களிலும் கூறப்பட்டுள்ளன.

நம்மாழ்வார் திருமணம் செய்து கொள்ளவில்லை. தொகுக்கப்பட்டுள்ள வரலாற்றுக் குறிப்புக்கள் இதைப்பற்றி எதையும் சொல்லவில்லை.

நம்மாழ்வார் பெருங்கவிஞர், அவருடைய வாழ்க்கை, நீரோட்டம் போல் தொடரும் தியானமாகவும், மெய்ஞ்ஞான வெளியீடாகவும் இருந்தது. அவர் பெற்ற உயர்ந்த

மெய்க்காட்சியைப் பற்றியும், தத்துவ ஞானச் செல்வத்தைப் பற்றியும் பாசுரங்கள் பேசுகின்றன. முயற்சி எதுவும் இல்லாமல் இயல்பாகவே அவர் தம் பாடல்களைப் பாடினார்.

நம்மாழ்வார் தம்முப்பத்தைந்தாவது வயதில் மறைந்தார். ஆழ்வார் திருநகரியில் உள்ள கோயிலில் இன்றும் நம்மாழ்வாரின் திரு உருவத்திற்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இந்தக் கோயிலிலிலும் திருவரங்கம் போன்ற வைஷ்ணவக் கோயில்கள் பிறவற்றிலும் நம்மாழ்வாரின் பாசுரங்கள் பாடப்படுகின்றன. தென்னிந்தியாவில் உள்ள திருவரங்கக் கோயிலில் திருவாய்மொழிப் பாசுரங்களைப் பாடும் வழக்கத்தை நிறுவினார்.

நம்மாழ்வார் எந்நேரமும் தெய்வீக உணர்வில் வாழ்ந்தார். அவருக்குப் பரந்த உணர்வு இருந்தது. "சர்வம் விஷ்ணு மயம் ஜகத்" என்ற உண்மை அவருக்கு அனுபவமாக இருந்தது. "அகிலம் யாவும் விஷ்ணுவின் நிறைவே!!, அவர் ஒரு மரத்தை அல்லது ஒரு மாட்டுக் கன்றை அல்லது ஒரு கல்தூணைத் தழுவிக் கொண்டு, "இதுவே என் ஹரி பகவான்", என்று கூறுவார். அவர் நீலநிற வானத்தைச் சுட்டிக்காட்டி, "என் நீல நிறக் கண்ணன் இங்கே இருக்கின்றான்", என்று கூறுவார். அவருடைய கண்களில் கண்ணீர் ஆறு போல் பெருகும். அவர் பாடினார், அழுதார், ஆனந்தக் கூத்தாடினார்.

நம்மாழ்வார், புழுதியில் திளைத்து, "இது வாமனனின் நிலம்" என்று கூறுவார். அவர் தீயைத் தழுவிக் கொண்டு "அச்சுதா" என்று கதறுவார். அவர் குளிர்ந்த தென்றலைத் தழுவிக் கொண்டு, " என் கோவிந்தா", என்று கூறுவார். அவர் மலையைப் பார்த்து,"நாராயணப் பெருந்தகையே! வருக!" என்று கூறுவார். மழை பெய்யும் போது அவர்,"விஷ்ணு வந்துள்ளார்" என்று கூறுவார்; களிநடம்

புரிவார். பாம்பின் பின்னால் ஓடிச் சென்று, "இது விஷ்ணுவின் படுக்கை" என்று கூறுவார். புல்லாங்குழலில் இசையைக் கேட்கும்போது அதைக் கண்ணன் வாசிப்பதாகக் கருதுவார். வெண்ணெயுடன் செல்லும் இடைக்குல மகளிரைக் கண்டால் அவர். "இது கண்ணன் புசித்த வெண்ணெய்" என்று கூறுவார். பசுக்களைக் கண்டால் அவற்றின் பின்னே ஓடிச் சென்று "இங்கே பகவான் கண்ணன் இருக்கிறார்", என்று அவர் கூறுவார்.

நம்மாழ்வார், "அடியேன் உனக்கு மலர்களைத் தொடுத்துப் பக்தியுடன் அணிவிக்கவில்லை, ஏத்திப் பரவவில்லை. அடியேன் என் பொறிகளை அடக்கவில்லை; உனக்கு உணவும் நீரும் படைக்கவில்லை. அடியேன் பெரிதும் துன்புறுகின்றேன். உனது திருக்காட்சியைத் தருக. அடியேன் கண்களில் கண்ணீர் ததும்பி வழிகிறது. உன்னைப் பிரிந்து எத்துணைக் காலம் இருப்பேன்? ஒளிச் சுடரே? எந்தாய்! அமிழ்தமே! ஞானத்தின் முடிவே! உன் கமல பாதங்களைப் பற்றிக் கொள்வேனாக! அடியேனிடம் இப்போதே வாராய்! உன் கருணையை என் மீது பொழிக! பிறப்பு, இறப்பு வட்டங்களிலிருந்து என்னை விடுவிப்பாயாக!" என்று பாடுகின்றார்.

# 4. குலசேகர ஆழ்வார்

குலசேகர் சேர நாடாகிய கேரள மாநிலத்தின் பக்தி மிகுந்த மன்னர். அவர் திடவிரத அரசரின் மகன்; கள்ளிக்கோட்டையின் காவலர். கலியுகத்தின் தசாம் ஆண்டாகிய பிரபவ ஆண்டு மாசித் திங்கள் சுக்லபட்சம் துவாதசி வியாழக் கிழமையன்று புனர்வசு நட்சத்திரம் உச்சமாக இருந்தபோது திருவஞ்சைக்களத்தில் அவர் பிறந்தார்.

குலசேகரர், ஸ்ரீஇராமபிரானின் ஆர்வம் மிகுந்த பக்தர். இராமபிரானுக்கு வழிபாடுகளைச் செய்வதிலும் அவனுடைய அடியார்களுக்குச் சேவை செய்வதிலும் அவர் மகிழ்ச்சியடைந்தார். அவர் கல்வியும், ஞானமும், பக்தியும் மிகுந்தவர். அவர் வடமொழியிலும் தென்மொழியிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். அவர் வேதங்களில் ஆழ்ந்த பயிற்சி பெற்றிருந்தார். அவர் வீரம் செறிந்தவர். அப்போதிருந்த தென்னாட்டு மன்னர்களை அவர் வெற்றி கொண்டார். "கூடாநாயகர்", "கொங்கர்கோன்" போன்ற பட்டங்கள் அவருக்கு இருந்தன.

குலசேகரர் நீதியோடும் விவேகத்தோடும் தமது நாட்டை ஆண்டார். மன்னர்கட்கெல்லாம் அவர் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினார். எங்கும் அமைதியும், செல்வங்களும் நிலவின. மக்கள் அனைவரும் மனநிறைவோடும் மகிழ்வோடும் வாழ்ந்தனர். குலசேகரர் நாட்டை ஆண்டாலும் அவருடைய மனம் இறைவனின் மீதே பதிந்திருந்தது. அவர் வைராக்கியத்தை வளர்த்துக் கொண்டார். உலகியல் இன்பங்கள் அவருக்குத் திருப்தியைத் தரவில்லை. அவர் புனித யாத்திரையாகத் திருவரங்கத்துக்குச் செல்லவும், அடியார்களுடன் கூடி இறைபணி செய்வதிலும், தியானம் செய்வதிலும் தம் வாழ்நாட்களைக் கழிக்க வேண்டும் என்றும் விரும்பினார். புறப்படுவதற்கு அவர் பலமுறைகள்

ஆயத்தம் செய்தார்; ஆனால் ஏதேனும் ஒவ்வொரு காரணத்தால் பயணம் தள்ளிப் போடப்பட்டது.

குலசேகர ஆழ்வார் தாச பாவம் கொண்டிருந்தார்; இது ஆண்டவனிடத்தில் அடிமையாக இருக்கும் மனோ பாவம் ஆகும். தொண்டர்களிடம் அவர் மிகுந்த பக்தி செலுத்தி வந்தார். இறைவனுடைய தொண்டர்களின் திருவடிப்புழுதியை உடம்பெங்கும் பூசிக் கொள்வது அவருக்குப், புனித கங்கையில் நீராடுவதைக் காட்டிலும் மங்களம் மிகுந்ததாக இருந்தது.

## அமைச்சர்கள் செய்த தீங்கு

குலசேகரரின் சமய ஈடுபாடு கொண்ட மனத்தை மாற்றுவதற்கு அமைச்சர்கள் முயற்சி செய்தனர். அரசரின் விலையுயர்ந்த முத்துமாலை காணாமற் போய்விட்டது. தொண்டர்களின் மீது மன்னன் மனத்தில் வெறுப்பு ஏற்பட அமைச்சர்கள் சூழ்ச்சி செய்தனர். எந்நேரமும் அரண்மனைக்குள் சுதந்திரமாக எல்லாக் காலங்களிலும் நுழையும் ஸ்ரீ வைஷ்ணவத் தொண்டர்களின் மீது அவர்கள் பழியைச் சுமத்தினர். தொண்டர்கள் கபடவேஷம் போடுபவர்கள் தான் என்று அவர்கள் அரசரிடம் கூறினார்கள்.

அரசர், "உண்மையான பக்தர்கள் களங்கமற்றவர்கள் என்பதை நிரூபித்துக் காட்டுவேன். திருடும் அளவுக்கு அவர்கள் தாழ்ந்து போகமாட்டார்கள்", என்று தெரிவித்தார். குடத்தில் அடைக்கப்பட்ட ஒரு நாகபாம்பைக் கொண்டு வருமாறு அவர் பணியாட்களிடம் பணித்தார். அவர், "பக்தர்கள் திருடியதாகக் குற்றம் சுமத்துபவன் இந்தக் குடத்தில் தன் கையை விடட்டும். குற்றச்சாட்டு உண்மையாக இருந்தால் நாகம் அவனைக் கடிக்காது", என்று கூறினார். யாரும் முன்வரத் துணியவில்லை. பக்தர்களின் களங்கமில்லாத தன்மையை நிரூபித்துக் காட்டுவதற்காகக்

குலசேகரர் தம்முடைய கைகளைத் துணிச்சலோடு குடத்தில் இட்டார். அரசரைக் கடிக்காமல் நாகம் தன்னைச் சுருட்டிக் கொண்டது. அரசர் இந்தச் சோதனையைப் பலமுறையும் இடைவிடாது செய்தார். அமைச்சர்கள் அவமானமடைந்து வெட்கித் தலைகுனிந்து நின்றார்கள். உண்மையான திருடனிடமிருந்து முத்துமாலை திரும்பப் பெறப்பட்டது.

## குலசேகரரின் இராம பக்தி

அரசவைப் பண்டிதர்களின் இராமாயண விரிவுரைகளைக் கேட்பதில் குலசேகரர் அளவற்ற மகிழ்ச்சி கொண்டிருந்தார். ஒரு நாள் பண்டிதர் கதையின் ஒரு பகுதியைப் பாடிப் பொருள் விளக்கம் தந்துகொண்டிருந்தார்; தண்டகாரண்யத்தில் கர, தூடணர்களின் ஏவல் 14,000 அரக்கர்களுடன் இராமன் தனித்துப் போர் புரிந்து கொண்டிருந்த நிகழ்ச்சி கதையில் இடம் பெற்றது. குலசேகரர் மிகுந்த பதட்டத்தை அடைந்தார். அவருடைய இராம பக்தி உடனே தூண்டிவிடப்பட்டது. இராமபிரானுக்கு ஆபத்து வந்து விட்டது என்றும் அவருக்கு உதவி செய்வதற்காகத் தாம் உடனே செல்ல வேண்டும் என்றும் அரசர் கருதினார். இராமபிரானுக்குத் துணை செய்வதன் பொருட்டுத் தம் படைகளை உடனே புறப்படத் தயாராகும்படி அவர் கட்டளை இட்டார். பண்டிதர் வேகமாக, "இராமபிரான் தனித்து நின்றே பதினாலாயிரம் அரக்கர்களை வென்று ஆசிரமத்துக்குப் பத்திரமாக திரும்பினார்", என்று படித்தார். அதன் பிறகுதான் அரசருடைய பதட்டம் தணிந்தது. இராமபிரான் போரில் வெற்றி பெற்றதனால் தமது படைகளைக் கலைந்து போகச் செய்தார். குலசேகரரின் ஸ்ரீஇராமபக்தி அவ்வளவு ஆழ்ந்ததாகவும், தீவிரம் உள்ளதாகவும் இருந்தது.

மற்றொரு சமயம், அரசவைப் பண்டிதர், இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற நிகழ்ச்சியைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார். குலசேகரர் பெரும் சினமடைந்தார்.

உடனே இலங்கைக்குப் புறப்படவும் இராவணனோடு போர் புரிந்து அவனைக் கொல்லவும் சீதையை மீட்டுக் கொண்டு வரவும் அவர் போர்க்கோலம் பூண்டார். அவர் உடனே கடற்கரையைக் கடந்து கடலில் பாய்ந்து இலங்கைக்கு நீந்திச் செல்ல முடிவு செய்தார். ஸ்ரீ இராமபிரானே குலசேகரரின் முன்னே தோன்றித் தம்முடைய இலங்கை வெற்றியைத் தெரிவித்தார். அவர் குலசேகரரை இறுகப் பற்றிக் கொண்டு கடற்கரைக்குப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்த்து அவருடைய தலைநகருக்கு அவரோடு உடன்வந்து பிறகு மறைந்துவிட்டார்.

## தீர்த்த யாத்திரை

குலசேகரர் முடிவாகத் தம் புதல்வர் திடவிரதனுக்கு அரசனாக முடிசூட்டிவிட்டுத் திருவரங்கம், திருப்பதி, அயோத்தி, சித்ரகூடம், பிருந்தாவனம், திருக்கண்ணபுரம் மற்றும் பல புண்ணியத் தலங்கட்குத் தீர்த்த யாத்திரை சென்றார்.

குலசேகரர் திருப்பதியில் தங்கினார். மனத்தை ஊக்குவிக்கும் பாசுரங்களை அங்கே அவர் பாடினார். "அரசுரிமைகளை யான் வேண்டேன். ஆட்சியுரிமைகளை யான் வேண்டேன். உலகப் புலனின்பப் பொருள்களை யான் வேண்டேன்; விண்ணுலக இன்பங்களையும் யான் வேண்டேன். இவ்வுலகில் உள்ள எதுவும் என்னை மயக்க முடியாது. வேங்கடவா! இந்தப் புனிதமலையில் நான் வாழ்வேனாக. இப்புனித கிரியில் யான் யாதேனும் ஒரு பொருளாக இருப்பேனாக". தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில், மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே" வேங்கடமலையில் ஓர் சடப் பொருளாக இருக்கும்பேறு வாய்த்தாலும் பெரு மகிழ்ச்சியடைவேன்." நின் கோயிலின் வாசல், அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும், படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!" உன் இடம் வந்து சேரும் ஒரு மலைப்

பாறையாகவாவது கிடப்பேனாக! நின் திருக்கோயிலில் ஒரு கற்றூணாக நிற்பேனாக் வேங்கடவா! நின் திருமலையில் துளசியாகவேனும் மல்லிகையாகவேனும் மலர்வேனாக; இங்குள்ள உன் மலர் வனத்துக்குப் பாயும் சிறு ஓடையாக இருப்பேனாக! வேங்கடத் தம்மானே! அருள்வாய்!"

வைஷ்ணவத் திருக்கோயில் ஒவ்வொன்றிலும் இறைவன் திருமுன்னிலையில் உள்ள வாசற்படி", "குலசேகர் படி" என்று அழைக்கப்படுகிறது.

## திருக் காட்சி

குலசேகரர் எப்போதும் இறைவனிடம், "நின் அற்புதமான திருக்காட்சியை எந்நாள் பெறுவேன் இராமபிரானே! நான் மன நிம்மதி இல்லாமல் தவிக்கின்றேன். உன் இனிய சந்நிதானத்தில் நான் நிற்பது எந்நாள்? அமைதியற்ற என் மனம் எப்போது உன் கமல பாதங்களில் நிலை கொள்ளும்? எப்போது என் மனம் உருகும்? எப்போது உனக்கேயுரிய தீவிரபக்தி என் மனத்தில் நிரம்பும்? உலகப் பற்றுள்ள மக்களுடன் நான் கலந்து உறவாட மாட்டேன். தொண்டர்களின் கூட்டுறவில் நான் வாழ்வேன்!"

ஒரு நாள் இரவு குலசேகரருக்கு நாராயண பகவானுடைய திருக்காட்சி வாய்த்தது. தெய்வீகப் பேரின்பக் கடலில் அவர் மூழ்கித் திளைத்தார்.

பக்தி மிகுந்த தொண்டர்களின் கூட்டத்தில் அவர் வாழ்ந்தார்; புனித மத நூல்களைக் கேட்பதிலும் கீர்த்தனைகள் பாடுவதிலும், தியானம் செய்வதிலும், வழிபாடுகள் செய்வதிலும் துதிகள் இசைப்பதிலும் அவர் தமது காலத்தைக் கழித்தார்.

## அருள் நூல்கள்

குலசேகரர், இராமபிரானுடைய ஆர்வம் மிகுந்த பக்தராக இருந்தமையால்,"பெருமாள்" என்று தமிழில் அழைக்கப்பட்டார்; இறைவனிடம் அவர் பூரணமாக

ஈடுபட்டிருந்தமையால், "குலசேகரப் பெருமாள்" என்று அழைக்கப்பட்டார்; அவருடைய தமிழ்ப் பாசுரங்கள், "பெருமாள் திருமொழி" என்று பெயர் பெற்றன; இது 105 தமிழ்ப் பாடல்களைக் கொண்ட தொகுதியாகும்." திவ்யப் பிரபந்தத்தின் முதலாயிரம் ஆகிய முதற்பகுதியில் இது சேர்க்கப்பட்டுள்ளது. இத்தொகுதியில் உள்ள சரிபாதிப்பாடல்கள் அவர் சென்று தரிசித்த திருக்கோயில்களின் பெருமைகளைப் போற்றுகின்றன. கண்ணபிரானைப் பற்றிய இருபது பாடல்கள் மதுரபாவம் செறிந்துள்ளன. சித்ரகூடம் பற்றிய பத்துப்பாடல்கள் இராமபிரானுடைய வாழ்க்கையில் நடைபெற்ற முக்கியமான நிகழ்ச்சிகளை விளக்குகின்றன. இராமாயணம் முழுவதையும் படிப்பதனால் பெறுகின்ற அவ்வளவு புண்ணியத்தையும் இந்தப் பத்துப் பாடல்களைச் சொல்லுவதனால் பெறமுடியும் என்பது வைஷ்ணவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

குலசேகரர் திருவரங்கத்தில் பல ஆண்டுகள் தங்கியிருந்தார். அவர் "முகுந்த மாலை"யை வடமொழியில் பாடியுள்ளார். அதில் நாற்பது பாடல்கள் உள்ளன. இது குலசேகரரின் மிகுந்த புகழ்பெற்ற நூலாகும்.

குலசேகரர், கண்ணபிரான், இராமபிரான் ஆகியோருடைய திருவிளையாடல்களைப் பற்றிப் பல பாசுரங்கள் பாடியுள்ளார்; கோபியரின் காதலையும், கண்ணனின் பெருமையையும், இராமனுடைய பெருமையையும் வீரச் செயல்களையும் அவற்றில் போற்றியுள்ளார்.

குலசேகர ஆழ்வார், திருநெல்வேலி மாவட்டத்தில், ஆழ்வார் திருநகரி என்ற ஊருக்கு அருகில் உள்ள பிரம்மதேசம் என்ற சிறிய கிராமத்தில் தமது 67-ம் வயதில் மறைந்தார்.

# 5. தொண்டரடிப் பொடி ஆழ்வார்

தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருமண்டங்குடியில் சோழிய அந்தணர் குடும்பத்தில் பிறந்தார். கலியுகத்தின் 289-ம் ஆண்டாகிய பிரபவ ஆண்டு மார்கழித் திங்கள் கிருஷ்ணபட்சம் சதுர்த்தசி செவ்வாய்க் கிழமையன்று அவர் பிறந்தார். விப்ர நாராயணர் என்று அவர் பெயரிடப்பட்டார். திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள அரங்க நாதப் பெருமானிடம் அவர் பக்தி பூண்டிருந்தார். ஹரி பகவானுடைய துளசி மாலையின் திரு அவதாரமாக அவர் போற்றப்படுகின்றார். திருவரங்கத்தில் அவருக்கு மலர் வனம் இருந்தது; இறைவனுக்கு அவர் நாள் தோறும் மலர் மாலைகளை அணிவித்து வந்தார்.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் வேத ஞானங்களில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். அவர் அதி தீவிர வைராக்கியம் படைத்திருந்தார். அவர் தமது மலர் வனத்தில் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தார். அரங்கநாதப் பெருமானுடைய பிரசாதங்களை உண்டு வாழ்ந்தார். இறைவனுடைய பெருமைகளை அவர் பாடியுள்ளார்.

ஒரு நாள் விப்ர நாராயணருடைய அழகான வனத்துக்குத் தேவதேவி என்ற வனப்புள்ள ஒரு தாசிப்பெண் தன் தமக்கையுடன் வந்தாள். விப்ரநாராயணர் செடிகளுக்குச் சுறுசுறுப்பாகத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தார். இறைவனுடைய திருநாமங்களை அவர் சொல்லிக் கொண்டிருந்தார். பெண்களை அவர் பார்க்கவில்லை. தமக்கை, "அவருடைய மனம் எப்போதும் இறைவன் மீது பதிந்துள்ளது. எந்தப் பெண்ணும் அவரை மயக்க முடியாது", என்று கூறினாள். தேவதேவி, "அவரை என் அடிமையாக்குவேன்", என்று கூறினாள். தமக்கை, "அதெல்லாம் வீண் நம்பிக்கை நீ அவரை மயக்கமுடிந்தால் நான் ஆறுமாதம் உனக்கு அடிமையாக இருப்பேன்," என்று இயம்பினாள். தேவதேவி, "இவரை மயக்குவதில் நான்

வெற்றி பெற வில்லையென்றால், நான் ஆறு மாதம் உனக்கு அடிமையாக இருப்பேன், " என்று தெரிவித்தாள்.

தேவதேவி ஒரு பெண் துறவியின் உடையைத் தரித்துக் கொண்டு விப்ர நாராயணரின் முன்னே நின்றாள். விப்ர நாராயணர், "தேவி, நீ யார்? உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினார்.

பெண் துறவி, "வணக்கத்திற்குரிய பக்தரே! தாசியின் வாழ்க்கையை நான் நடத்த வேண்டும் என்று என் தாய் விரும்புகிறாள். அப்படிச் செய்ய நான் உறுதியாக மறுத்துவிட்டேன். நான் உமது நிழலில் தங்க வந்திருக்கிறேன். அருள் கூர்ந்து என்னைக் காப்பாற்றுங்கள். நான் இந்த மரத்தின் அடியில் வாழ்வேன்; வனத்தைப் பார்த்துக் கொள்வேன்; இறைவனுக்கு மலர் மாலைகளைத் தொடுப்பேன்; நீங்கள் உண்டு எஞ்சிய மிச்சத்தை உண்பேன்; எல்லா வழிகளிலும் உங்களுக்குப் பணிவிடைகள் செய்வேன்", என்று கெஞ்சினாள். விப்ரநாராயணர் இரக்கத்தால் கருணை கூர்ந்தார். வனத்தில் சிறிது தூரத்தில் வாழ அவளுக்கு அனுமதி வழங்கினார்.

ஒரு நாள் பலத்த மழை பிடித்துக் கொண்டது. பெண் துறவியின் ஒரே ஆடை மழையில் நனைந்துவிட்டது. அவள் குளிரால் நடுங்கினாள். அவளுடைய பரிதாப நிலையைப் பார்த்து விப்ரநாராயணர் இரக்கங் கொண்டார். தமது குடிசைக்குள் வருமாறு அவளை அழைத்தார். தம்முடைய உலர்ந்த ஆடைகளை அவர் அவளுக்குக் கொடுத்தார். இருவரும் தனியாக இருந்தனர். முடிவில் அவள் அவரை மயக்கித் தனக்கு அடிமையாக்கிவிட்டாள்; அவர் இறைவனை முற்றிலும் மறந்துவிட்டார். இறுதியாக, அவர் அவளுடைய வீட்டுக்குச் சென்று அவளுடன் வாழ்ந்து வரலானார். அவர் தம் சொத்துக்களையும் நற்குணத்தையும் பக்தியையும் மலர்வனத்தையும் அரங்கநாதப் பெருமாளையும்

இழந்து விட்டார். அவர் காமத்தின் அடிமையாகவும் தேவதேவியின் அடிமையாகவும் ஆகி விட்டார்.

விப்ர நாராயணர் எல்லாவற்றையும் தேவதேவிக்குத் தந்துவிட்டார். ஒரு நாள் காசு எதுவும் இல்லாமல் சென்று அவர் தேவதேவியின் வீட்டுக் கதவைத் தட்டினார். "யார் அது?" என்று தேவதேவி கேட்டாள். "உன் காதலன்" என்று விப்பிரர் கூறினார்.

தேவதேவி : "என்ன கொண்டு வந்திருக்கிறீர்?"

விப்பிரர் : "அன்புள்ள தேவ தேவியே! என்னுடைய ஆசையைக் கொண்டு வந்திருக்கிறேன்".

தேவதேவி : "பணம் கொண்டு வந்திருக்கிறீரா?"

விப்பிரர் : "நான் எல்லாவற்றையும் உனக்குக் கொடுத்துவிட்டேனே, இப்போது என்னிடம் ஒரு செப்புக் காசு கூட இல்லை."

தேவதேவி : இங்கிருந்து போய்விடும். இனிமேல் இங்கு வரவேண்டாம்."

விப்பிரர் : "தேவதேவி! கதவைத் திற. ஆசையால் நான் செத்துக் கொண்டிருக்கிறேன்.

தேவதேவி : சீக்கிரம் இந்த இடத்தை விட்டுப் போய்விடும்."

விப்பிரர் எப்போதும் தேவதேவியையே நினைத்துக் கொண்டிருந்தார். அரங்கநாதப் பெருமாள், கோயிலுக்குரிய ஒரு தங்கத் தாம்பாளத்தை எடுத்துக் கொண்டு சென்று தேவதேவியின் வீட்டுக் கதவைத் தட்டினார்.

தேவதேவி : 'யார் அங்கே"?

அரங்கநாதர் : "நான் விப்பிரரின் சேவகன்",

தேவதேவி : "என்ன விஷயம்?"

அரங்கநாதர் : " விப்பிரர் உனக்கு ஒரு தங்கத் தாம்பாளத்தை அனுப்பி இருக்கிறார்".

தேவதேவி : "உள்ளே வாரும்"

தேவதேவி கதவைத் திறந்தாள்; "தயவு செய்து என்காதலர் விப்பிரரை உடனே வரச் சொல். அவருக்காக நான் ஏங்கி வாடிக் கொண்டிருக்கிறேன் என்று அவரிடம் தெரிவி" என்று கூறினாள்.

அரங்கநாதர், "ஆகட்டும்",

அரங்கநாதர் விப்பிரரிடம் சென்றார். விப்பிரர் மூர்ச்சித்த நிலையில் இருந்தார். அரங்கநாதர்", விப்பிரரே! எழுந்திருங்கள். தேவ தேவி உங்களால் ஆழ்ந்த மகிழ்ச்சியடைந்திருக்கிறாள். சீக்கிரம் வருமாறு அவள் உங்களை அழைக்கிறாள்", என்று தெரிவித்தார். விப்பிரர் அவளிடம் ஓடினார். தேவதேவி விப்பிரரிடம் மிகுந்த மரியாதை பாராட்டினாள். அன்று இரவு அவர் அவளுடன் தங்கினார்.

காலையில், தங்கத் தாம்பாளம் காணாமல் போயிற்று என்ற உண்மை கோயிலில் கண்டுபிடிக்கப்பட்டது. காவல்துறையினர் தீவிரமாகத் தேடினார்கள். தாம்பாளம் தேவதேவியின் வீட்டில் கண்டுபிடிக்கப்பட்டது. விப்பிரர் தம் சேவகரின் வாயிலாகத் தாம்பாளத்தைத் தனக்கு அனுப்பினார் என்று தேவதேவி தெரிவித்தாள். தமக்குச் சேவகர் யாரும் இல்லை என்றும், தாம் தங்கத் தாம்பாளத்தை [illegible]க்கு ஒரு போதும் அனுப்பவில்லை என்றும் விப்பிரர் [illegible]னார். தங்கத் தாம்பாளம் கோயிலுக்கு மீட்டுத் தர[illegible]து. திருட்டுப் பொருளை ஏற்றுக் கொண்டதற்காகத் தேவ தேவிக்கு அபராதம் விதிக்கப்பட்டது. நிசுலபுரியின் (திருச்சியில் உள்ள உறையூர்) அரசரின் ஆணைப்படி விப்பிரர் சிறையில் அடைக்கப்பட்டார்.

இரவில் அரசருக்கு ஒரு கனவு வந்தது. அரங்கநாதப் பெருமாள் அவருடைய கனவில் தோன்றி, "தேவதேவிக்குத் தாம்பாளத்தை நான் தான் கொடுத்தேன். என் பக்தரை மீட்பதற்காக நான் இதைச் செய்தேன். விப்பிரர் சிறிதும் கபடம் இல்லாதவர். தமது மலர் வனத்துக்கு அவரைத் திருப்பி அனுப்பி விடுங்கள்", என்று கூறினார். அரசர் உடனே விப்பிரரை விடுதலை செய்தார்.

தன் பாவங்களுக்காகத் தான் செய்ய வேண்டிய பிராயச் சித்தம் என்ன என்று விப்பிரர் அருட் சான்றோர்களைக் கேட்டார். ஸ்ரீ வைஷ்ணவர்களின் பாத தூளியைத் தரித்துக் கொள்வதும், அவர்களுடைய திருவடிகளை மஞ்சன நீராட்டி அத்தண்ணீரைப் பருகுவதும் மிகச் சிறந்த பிராயச் சித்தம் ஆகும் என்று அவர்கள் அறிவித்தனர். விப்பிரர் அவ்வாறே செய்து "தொண்டரடிப் பொடி ஆழ்வார்" என்று பெயர் பெற்றார்; தொண்டர்களின் பாத தூளியைத் தமது தலையின்மீது அணிந்தவர் என்பது இத்தொடரின் பொருளாகும்.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் தம் கண்களில் கண்ணீர் ததும்பியவராய் அரங்கநாதப் பெருமானுடைய கோயிலுக்குச் சென்று தமது செய்கைக்கு மனம் பெரிதும் வருந்தியவராய்", அரங்கத்து எம்மானே! என் பாவங்களைப் பொறுத்து அருள்செய்! ஒரு பெண்ணின் பிடியில் நான் வீழ்ந்தேன். என் உணர்வையும் அறிவையும் இழந்தேன். பரிதாபத்துக்குரிய படுபாவியானேன். அந்தோ! உன்னையே மறந்தேன். உன்னைத் தொழவில்லை. உன் புகழை ஏத்திய பாடவில்லை. கருணை வள்ளலே! என்னை மீட்டு ) சென்று என்னைக் காப்பாற்றிவிட்டாய்! நான் உன் அடிமை. என் மீது உன் அருள் மழையைப் பொழிவாய்! நீ பதிதபாவனன் அல்லவோ! நீ பக்தவச்சலன் அல்லவோ! நீயே என் தந்தை, தாய், குரு, ஆண்டான், தோழன், உன் பொற் கமல பாதங்களை இனிப் பிரியேன். நான் பூரண சரணாகதி, உன்னிடம் மட்டும் அடைந்துவிட்டேன்; அரங்கத்து

அம்மானே!" என்று ஓலமிட்டார். நாள்தோறும் அவர் கோயிலுக்குச் சென்று இறைவனுடைய இனிய திருநாமங்களையும் பெருமைகளையும் பாடினார். "அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே"! என்ற திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களை அவர் பாடினார். 'என் உள்ளத்தில் எழுந்தருள்" என்பது இதன் கருத்து. தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருவரங்கத்தில் 105 ஆண்டுகள் வாழ்ந்தார். பிறகு ஹரி பகவானின் வைகுந்த உலகத்தை அடைந்தார். அவருடைய அழகிய பாசுரங்கள் "திருமாலை" என்றும் "திருப்பள்ளிஎழுச்சி" என்றும் பெயர் பெற்றுள்ளன.

தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும் சமகாலத்தவர்; எனவே தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று தோன்றுகிறது.

தேவதேவியும் தன் தாசி வாழ்க்கையைப்பற்றி வெறுப்படைந்தாள். தன் சொத்துக்களை யெல்லாம் கோயிலுக்குத் தந்து விட்டு அரங்கநாதப் பெருமானுடைய எளிய பக்தை ஆகிவிட்டாள்.

# 6. திருப்பாணாழ்வார்

திருப்பாணாழ்வார் திருச்சியின் அருகில் உள்ள உறையூரில் பிறந்தார். கலியுகத்தின் 342-ம் ஆண்டாகிய துன்மதியாண்டு கார்த்திகைத் திங்கள் கிருஷ்ணபட்சம் துவிதிய நாளாகிய புதன்கிழமையன்று அவர் பிறந்தார். முனிவாகனன் என்ற பெயரும் அவருக்கு உண்டு; ஏனெனில் அவரைச் சாரங்க முனிவர் தம் தோள்களில் சுமந்து கொண்டு கோயிலுக்குச் சென்றார். விஷ்ணுவின் மார்பில் உள்ள ஸ்ரீவத்சம் என்ற அடையாளத்தின் அவதாரமாக அவர் போற்றப்படுகிறார்.

திருப்பாணாழ்வார் மனித இனப் பெற்றோர்களுக்குப் பிறக்கவில்லை. நெல் வயலில் கிடந்த அவரைப் பஞ்சமத் தம்பதிகள் கண்டு எடுத்துக் கொண்டு வந்து வளர்த்தார்கள்; எனவே அவர் ஒரு ஹரிஜனர்.

திருப்பாணாழ்வார் அரங்கநாதப் பெருமானிடம் பக்தி பூண்டிருந்தார்; இறைவனுடைய பெருமைகளைப் புகழ்ந்து அழகான பாசுரங்களைப் பாடினார். ஆதலால் அவர் 'திருப்பாண் (பண்) ஆழ்வார்" என்று அழைக்கப்பட்டார். அவர் திருவரங்கத்துத் திருக்கோயிலுக்குச் செல்ல ஏங்கினார்; ஆனால் தமது தாழ்ந்த குலம் பற்றிய காரணத்தால் செல்லத் துணியவில்லை. இவர் உறையூரை விட்டுத் திருவரங்கத்துக்கு வந்தார். காவிரியின் தென்கரையில் ஒரு குடிசை கட்டிக் கொண்டார்; அரங்கப் பெருமானைப் புகழ்ந்து தமது யாழில் பக்திப் பாடல்களைப் பாடினார்.

ஒரு நாள் உலக சாரங்க ஜீயர் அரங்க சென்று பெருமானின் அபிஷேக ஆராதனைக்காகப் புனித நீரைக் கொண்டு வரக் காவிரிக்குச் சென்றார். திருப்பாணாழ்வார் பக்தியுடன் கூடிய தியானத்தில் தம்மை மறந்தவராய் அருகில் நின்று கொண்டிருந்தார். எனவே அந்தணர்கள் வந்தபோது அவர் விலகவில்லை. அந்தணர்கள் ஒரு கல்லை எடுத்து

அவருடைய நெற்றியில் எறிந்தனர். நெற்றியிலிருந்து இரத்தம் பெருக்கெடுத்தோடியது. அந்தணர்களிடம் அவர் மன்னிப்பை வேண்டி அப்பால் சென்றார்.

ஜீயர் கோயிலுக்குத் திரும்பிச் சென்ற போது இறைவனுடைய நெற்றியிலிருந்து இரத்தம் பெருகுவதைக் கண்டார். அரங்கநாதப் பெருமான் ஜீயரின் கனவில் தோன்றி, "நீ கல்லால் எறிந்த தாழ்த்தப்பட்ட மனிதர் ஒரு பெரிய ஞானி. அவர் எனக்கு மிகவும் பிரியமானவர். உன்னுடைய தோள்களில் அவரை ஏற்றிக்கொண்டு என்னிடம் அழைத்து வா" என்று கட்டளை இட்டார்.

ஜீயர் பக்தரின் குடிசைக்குள் நுழைந்தார். அவர் பக்தரின் திருவடிகளில் பணிந்து வீழ்ந்தார்; "அரங்கநாதப் பெருமாள் தங்களைச் சுமந்து கொண்டு அவருடைய சந்நிதிக்கு அழைத்துக் கொண்டு வருமாறு என்னைப் பணித்துள்ளார். அன்பு கூர்ந்து என் தோள்களில் அமருங்கள்;" என்று தெரிவித்தார். திருப்பாணாழ்வார் கடுமையாக மறுத்து, நான் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்தவன். தங்களின் தோள்களின் மீது என்னால் அமரமுடியாது;" என்று கூறினார்.

ஜீயர் அவரைத் தூக்கித் தம் தோள்களில் ஏற்றிக் கொண்டு அரங்க நாதப் பெருமான் முன்னே இறக்கிவிட்டார். ஆழ்வார் எல்லையற்ற மகிழ்ச்சியை அடைந்தார். பெருங்களிப்புற்று அவர் கூத்தாடினார். ஆழ்வார் கடவுளைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து அவருடைய பெருமைகளைப் புகழ்ந்து பாடினார்; அப் [illegible]ள், "அமலனாதிப்பிரான்" என்று அழைக்கப்படு[illegible]. அவர், " அரங்கப் பெருமானே! என்பால் நீ இ[illegible]டிய பேரருள் புரிவதற்கு அடியேன் கோர மாதவம் செய்தேன் கொல்? நீ என் உயிர்க்காவலன், நீ கருணை மாகடல், நான் உன்னவன், உன் அடியவன்," என்று போற்றியுள்ளார்.

ஆழ்வார் தெய்வத்தினுள் மறைந்தார். சுடர்மிக்க சோதி ஒன்று தென்பட்டது. அந்த தெய்வீக ஒளியில் ஆழ்வார் மறைந்துவிட்டார்.

இந்த ஞானியின் வரலாற்றுக் காலத்தைச் சரியாகச் சொல்வது கடினம். ஒரு வேளை இவர் தொண்டரடிப் பொடியாழ்வார் அல்லது திருமங்கையாழ்வார் காலத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்.

# 7. திருமங்கை ஆழ்வார்

திருமங்கை ஆழ்வார் சோழநாட்டில் திருக்குரையலூர் என்ற ஊரில் பிறந்தார். கலியுகத்தின் 398-ம் ஆண்டாகிய நள ஆண்டு கார்த்திகைத் திங்கள் பௌர்ணமி நாள் வியாழக் கிழமையன்று அவர் பிறந்தார். திருமங்கை ஆழ்வாருக்குப் பரகாலர், நீலர் என்ற பெயர்களும் உண்டு. ஹரி பகவானின் சாரங்கம் என்ற வில்லின் திருஅவதாரமாக அவர் போற்றப்படுகின்றார். அவர் ஒரு குறுநில மன்னர். அவர் துணிச்சல் மிக்க ஒரு போர்வீரர்; சிறிதும் அச்சமற்ற ஒரு தலைவர். சோழ மன்னரின் படைத் தளபதியாக அவர் இருந்தார்.

நீலர், திருவாலி என்ற ஊரில் வாழ்ந்த குமுதவல்லி என்ற பக்திமதியாகிய கன்னியை மணந்து கொள்ள விரும்பினார். அவள் ஹரிபகவானின் சிறந்த பக்தை. ஸ்ரீ வைஷ்ணவராக இல்லாத அவரை மணந்து கொள்ள அவள் மறுத்துவிட்டாள். பிறகு நீலர் வைஷ்ண சமயத்தவர் ஆனார். பிறகு குமுதவல்லி, "இந்தப் புற மாற்றத்தால் ஒரு பயனும் இல்லை. நீங்கள் நாள்தோறும் 1008 பக்தர்களுக்கு ஓராண்டுக் காலம் திருவமுது படைக்கவேண்டும்; ஒவ்வொரு நாளும் அவர்களுடைய பிரசாதத்தை எனக்கு கொண்டு வந்து தரவேண்டும்", என்று தெரிவித்தாள். நீலர் இசைந்தார். அவர் ஓராண்டுக்காலம் நாள்தோறும் 1008 வைஷ்ணவ பக்தர்களுக்குத் திருவமுது படைத்தார். பிறகு குமுதவல்லி நீலரை மணந்தாள்; இருவரும் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

உபசாரங்களுக்குச் செய்யும் பணிவிடைகளில் நீலர் தம் மிச்சத்தை எல்லாம் செலவழித்தார். எனவே சோழ மன்னருக்கு அவரால் திறை செலுத்த முடியவில்லை. மன்னர் அவரைச் சிறையில் அடைத்தார். பிறகு பகவான் நீலரின் கனவில் தோன்றி காஞ்சிபுரத்தில் வேகதி ஆற்றின் மணற் படுகையில் ஏராளமான செல்வம் அடங்கிய புதையல் உள்ளது. அதை நீ எடுத்துக் கொண்டு சென்று

திறையைக் கட்டிவிடு" என்று அறிவித்தார். நீலர் சென்று ஆற்று மணற் படுகையின் கீழே புதைக்கப்பட்டிருந்த புதையலைத் தோண்டி எடுத்து அரசருக்குத் திறை செலுத்தினார். இதன் பின்னர் அவர் கொள்ளையடிப்பதைத் தொழிலாகக் கொண்டார்; பாவிகளாக இருந்த செல்வர்களிடம் பொருள் பறித்து இறைவனுடைய திருப்பணிகளுக்காகச்செலவிட்டார்.

ஒரு நாள் பகவான் ஹரியும் இலக்குமி தேவியும் அவரைக் காப்பாற்ற விரும்பினர். ஆண்டவன் ஓர் அந்தணராகவும், இலக்குமிதேவி அந்தணரின் மனைவியாகவும் வடிவம் கொண்டனர். ஒரு திருமண விழாவிலிருந்து திரும்பி வரும் மாப்பிள்ளையும் மணப்பெண்ணுமாக அவர்கள் வந்தனர். நீலர் அவர்களிடம் இருந்த அணிகலன்களைக் கவர்ந்து ஒரு பேழையில் அவற்றை மூடிவைத்தார். அந்தணருடைய விரலில் ஒரு மோதிரம் இருந்தது. நீலர், "அந்த மோதிரத்தை எனக்குக் கொடு. உனக்குத் தங்க மோதிரம் வேண்டியதில்லை", என்று மிரட்டினார். அந்தணர், "அதை விரலில் இருந்து கழற்றுவது கடினம்", என்று கூறினார். நீலர், "நான் அதைக் கழற்றி விடுவேன்", என்று கூறினார். அவர் தம் வாயால் கௌவி அதைக் கழற்றி விட்டார்.

நீலர் பேழையைத் தூக்க முயன்றார்; ஆனால் முடியவில்லை. அந்தணரிடம் அவர், "நீ ஏதோ தந்திரம் செய்துவிட்டாய். ஏதோ ஒரு மந்திர சக்தியால் அது மிகவும் பளு உள்ளதாகச் செய்துவிட்டாய். அந்த மந்திரத்தை எனக்குச் சொல். மறுத்தால், உன்னைக் கொன்று விடுவேன்", [illegible] அதட்டினார். அந்தணர் வேடத்தில் இருந்த ஹரிபகவான் புனித அஷ்டாட்சர மந்திரத்தை, "ஓம் நமோ நாராயணாய" என்ற எட்டெழுத்து மந்திரத்தை நீலரின் செவிகளின் இரகசியமாக ஓதினார். பிறகு பகவான் நீலருக்குத் தம் வடிவத்தைக் காட்டினார். நீலர் உடனே கடவுளின் கமல

பாதங்களில் வீழ்ந்து பணிந்து அவருடைய அருளைப் பெற்றார்.

நீலர், "பெரிய திருமொழி", "திருக்குறுந் தாண்டகம்", "திருநெடுந்தாண்டகம்", "திருஎழு கூற்றிருக்கை", " சிறிய திருமாலை", " பெரிய திருமால்", என்று புகழ்ப்படும் தெய் வீகப் பாசுரங்களை இயற்றினார். மனம் திருந்தியவராகக் கண்ணீர் பெருக, அவர், "காமத்தில் என் வாழ்வைப் பாழாக்கினேன். பெருமான் என்னைக் காப்பாற்றினான். கொடுங்குற்றங்கள் பல இழைத்தேன். இறைவனிடமே பொருள் பறித்தேன். நான் ஒரு முட்டாள். இறைவனுடைய திருநாமம் என்னைக் காப்பாற்றிவிட்டது. ஆழ் வண்ண அண்ணலே! வாழி! வாழி! நீடுழி வாழி" என்று மனம் உருகிப் பாடினார்.

விண்ணில் ஓர் அசரீரி கேட்டது: "அஞ்சற்க, திருமங்கை ஆழ்வாரே! நீ எனக்குத் தீங்கு இழைக்கவில்லை திருவரங்கத்துக்குச் செல்க. கோயில் கட்டுமானப் பணிகளை நிறைவு ஆக்குக. யாண்டும் பக்தியைப் பரப்புக! உன் அழகிய பாமாலைகளை எனக்குச் சூட்டுக. பின் என்னை வந்து அடைக!"

திருமங்கை ஆழ்வார் கோயில் கோயிலாகச் சென்று எண்பத்தாறு திருப்பதிகளைப் பற்றிப் புகழ்ப் பாசுரங்களைப் பாடினார். சீர்காழியில் திருஞான சம்பந்தப் பெருமானைச் சந்தித்தார்; அவரால் பெருமைப்படுத்தப்பட்டார். எனவே அவர் கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று அறி[illegible]கிறது.

திருமங்கை ஆழ்வார் நாகப்பட்டினத்திலிருந்து புத்தரின் பொற்சிலை ஒன்றைக் கொண்டு வந்தார். அத்தங்கத்தைத் திருவரங்கக் கோயிலைக் கட்டுவதற்குப் பயன்படுத்தினார். தம்முடைய 105ம் வயதில் அவர் நித்தியப் பேரின்ப வீடாகிய வைகுந்த பதவியை அடைந்தார்.

நம்மாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கத்துக்கு வந்தார். திருமங்கை ஆழ்வார் அவருக்குச் சிறந்த வரவேற்பை நல்கி, ஆழ்ந்த பக்தியுடன் அவருடைய உணர்ச்சி மிக்க பாசுரங்களைச் செவி மடுத்தார்.

திருமங்கையாழ்வார் வழங்கியுள்ள செய்தி, "பகவான் விஷ்ணுவின் திருநாமங்களை இடையறாது கூறுக. எந்நேரமும் அவரை நினைக. இறைவன் பால் தானாக முழுமையாகச் சரணாகதி அடைக; அவன் திருவருளைப் பெறுக. அவனுடைய தாமரைத் திருவடிகளைப் பற்றிக் கொள்ளுக. நம்மை உய்விப்பவனும் மீட்பவனும் நாராயணனே. அவன் கருணை மா கடல், பக்தர்களுக்குத் தொண்டு செய்க. பக்தனும் பகவானும் ஒன்றே. அவன் புகழைப் பாடுக. தெய்வீகக் களிப்பு ஏறி ஆடுக. பகவானில் வாழ்க, அவனுடைய ஆயிரம் திருநாமங்களைப் பாடுக. "விஷ்ணு சகஸ்ர நாமத்தை ஓதுக" என்பதாம்.

# 8. திருமழிசை ஆழ்வார்

திருமழிசை ஆழ்வாருக்குப் பக்தி சாரன் என்ற பெயரும் உண்டு. தாம் பிறந்த ஊரின் பெயரால் அவர் திருமழிசை ஆழ்வார் என்று அழைக்கப்பட்டார். அவர், பிரம்மரிஷிகளுள் ஒருவராகிய பிருகு முனிவருக்கும் கனகபதி அல்லது கனகாங்கி என்ற விண்ணுலக அப்சர மங்கைக்கும் மகனாகப் பிறந்தார். அவருடைய பிறந்த ஊர் மஹிசரம் அல்லது மஹிசாரபுரம்; அது மஹிசை என்றும் திருமழிசை என்றும் மருவிற்று; இச்சிற்றூர் சென்னைக்கு அருகில் உள்ளது.

இந்த ஆழ்வார் கி.பி. ஆறாம் அல்லது ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று சிலர் கூறுகின்றனர். இது ஓர் ஊகம் தான்.

திருமழிசை ஆழ்வார் பிறந்தவுடனே தாயார் அவரைப் பிரப்பஞ் செடிகளின் புதருக்குள் வீசி எறிந்து விட்டாள்; ஏனெனில் குழந்தை பார்ப்பதற்கு அருவருப்பான தோற்றத்தையும் அரைகுறை அவயவங்களையும் உடையதாக இருந்தது. திருவல்லன் என்ற விறகு வெட்டி தன் மனைவி பங்கஜவல்லியுடன் பிரம்புகளை வெட்டுவதற்காக அங்கே வந்தான். அவர்கள் குழந்தையைக் கண்டு தங்கள் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு சென்றார்கள். குழந்தை தாய்ப்பாலைக் குடிக்கவில்லை. ஒரு முதிய உழவர் வழக்கமாகப் பால் கொண்டுவந்து தரலானார்; அவர் தூய உள்ளமும், உண்மையான தெய்வீக இயல்பும் உள்ளவராக இருந்ததனால் குழந்தை பாலை ஏற்றுக் கொண்டது. இந்த உழவர் ஒரு நாள், குழந்தை உண்டு எஞ்சிய பாலில் சிறிதளவு தம் மனைவிக்குத் தந்தார். பிரசாத மகிமையினால் அவர்களுக்கு ஓர் அற்புதமான குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குக் கணி கண்ணன் என்று பெயரிட்டனர். இந்தக் கணிகண் பக்திசாரருக்குச் சிறு

பருவத்தில் விளையாட்டுத் தோழனாக இருந்து பிற்காலத்தில் அவருடைய ஆர்வம் மிகுந்த சீடராக ஆனார்.

பக்திசாரர் தம் குழந்தைப் பருவத்திலிருந்தே பக்தியில் மூழ்கி இருந்தார். தாம் ஒரு பிறவி மேதை என்பதை அவர் நிரூபித்தார். அவர் புனித வேத நூல்கள் எல்லாவற்றையும் கற்று வல்லவரனார். வேத மதங்களையும் வேதத்துக்குப் புறம்பான மதங்களையும் அவர் ஒப்பிட்டு ஆராய்ந்தார். வேதாந்தம், சைவம், புத்தம், சமண மதங்களில் அவர் ஆழ்ந்த ஞானத்தைப் பெற்றார். பல்வேறு சமயநூல்களையும் கற்றுத் தேர்ந்த பிறகு, சைவ சமயத்தைப் பின்பற்றுவதென்ற முடிவுக்கு அவர் வந்தார். அவர் சைவ சமயத்தை ஆர்வத்துடன் நேசித்தார். இவ்வாறு அவர் சைவராக இருந்த போது அவரைச் சிவவாக்கியர் என்று அழைக்கப்பட்டார். அவர் சைவ சமய நூல்களை எழுதினார்; அதைப் பரப்பவும் தொடங்கினார். சிவபெருமானைப் பற்றி அவர் பல பாடல்களைப் பாடினார்.

பேயாழ்வார் சிவவாக்கியரை வைணவ சமயத்திற்கு மாற்ற விரும்பினார். சிவவாக்கியரை வைணவ சமயத்திற்கு மாற்றி விட்டால் அவரால் அளவற்ற உதவி உண்டாகும் என்று அவர் கருதினார். ஒரு நாள் அவர் சில பூச்செடிகளை வேர்கள் மேலே நோக்கியிருக்குமாறு நட்டுத் துவாரங்கள் நிறைந்த குடத்தில் உள்ள தண்ணீரை அவற்றுக்கு அவர் வார்க்கத் தொடங்கினார். இதைப்பார்த்த சிவவாக்கியர் அவரைப் பார்த்துச் சிரித்தார். பேயாழ்வார், உண்மையான சமயத்தை விட்டுவிட்டு நீ ஒவ்வொரு சமயமாக [illegible] கொண்டிருக்கும் நிலையில் உன் உயிருக்கு நீ [illegible]மாறு செய்ய முடியுமா? சிரிக்கத்தக்க செயலை நீயே செய்து கொண்டிருக்கும் போது, என்னைப் பார்த்து நீ ஏன் சிரிக்கிறாய்? எல்லாச் சமயங்களையும் ஒப்பிட்டு நீ ஆராய்ந்த போதிலும் உண்மையான மதத்தையும் பரம்பொருளாகிய இறைவனையும் நீ இன்றும் கண்டு கொள்ளவில்லை", என்று பதில் கூறினார். உடனே சிவவாக்கியரின் கண்கள்

திறந்து கொண்டன. பேயாழ்வாருடன் அவர் வாக்குவாதத்தில் இறங்கினார். அவர் தோல்வியுற்றார். அவர் வைணவ மதத்தவராகிப் பேயாழ்வாரின் சீடரானார். அவர் தாசருக்குரிய பெயராகிய"திருமழிசை ஆழ்வார்" என்ற பெயரைப் பெற்றார்.

திருமழிசை ஆழ்வாரின் ஆர்வம்மிகுந்த பக்தராகிய கணிகண்ணன் தம் குருநாதருக்கு மிகவும் உண்மையுடன் பணிவிடைகள் செய்து வந்தார். வயதான மூதாட்டி ஒருவரும் ஆழ்வாருக்கு மிகுந்த உற்சாகத்தோடும் உண்மையோடும் பணி விடை செய்து வந்தாள். இப்பெண்ணின் பணிவிடைகளால் ஆழ்வார் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார். அவர் அந்தப் பெண்ணிடம், "உனக்கு என்ன வரம் வேண்டும்" கேள். அதைத் தருகிறேன்", என்று கூறினார். அந்த மூதாட்டி, "வணங்கத்தக்க குருநாதரே! என்னை ஓர் இளம்பெண்ணாக மாற்றுங்கள்;" என்று வேண்டினாள். தம்முடைய புண்ணிய தீர்த்தத்தைத் தெளித்து ஆழ்வார் அவளை அழகான பெண்ணாக மாற்றிவிட்டார். அப்போது காஞ்சியை ஆண்ட பல்லவ மன்னர் அந்தப் பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டார்.

காலம் சென்றது; அரசர் தமது மனைவியின் அழகும் இளமையும் ஒரே நிலையில் இருந்ததைக் கண்டார்; அதே சமயம் தாம் மேலும் மேலும் மூப்படைந்து வருவதையும் கண்டார். அவர் தம் மனைவியிடம், "உன் இளமைக்கும் அழகுக்கும் உரிய இரகசியம் என்ன?" என்று கேட்டார்.

நிறுத... சி, "ஒரு பெரிய பக்தர் இருக்கிறார். அவருடைய பெயர் திருமழிசை ஆழ்வார். விஷ்ணு கோயில் குளத்துக்கு அருகில் இருக்கிறார். அவர் சிறந்த யோகியும் கூட கணிகண்ணன் அவருடைய சீடர், அன்னம் பெற அவர் நாள் தோறும் இங்கே வருகிறார். ஆழ்வாரை, அவருடைய சீடரின் மூலம் தாங்கள் அணுகலாம்; வரங்களையும் பெறலாம்", என்று தெரிவித்தாள்.

அரசர், கணிகண்ணனை அழைத்து, "உன் குருநாதரை இங்கே அழைத்துக் கொண்டு வா. அவருக்கு நான் பரிசுகள் கொடுப்பேன்", என்று கூறினார். கணிகண்ணன், அரசே! என் குருநாதர் இங்கே வரமாட்டார்; அரசச் சலுகை எதையும் பெற அவருக்கு விருப்பம் இல்லை. மூவுலகங்களையும் ஆளும் பேரரசராகிய ஹரிபகவானுக்குத் தான் அவர் கீழ்ப்படிவார்", என்று தெரிவித்தார்.

அதனால் அரசர், "கணிகண்ணா! என்னைப் புகழ்ந்து ஒரு பாடல் பாடு. நான் உனக்குப் பரிசுகள் வழங்குவேன்", என்று கூறினார். கணிகண்ணன் "நான் பகவானுடைய பெருமைகளையும் பக்தர்களின் பெருமைகளையும் மட்டும் பாடுகிறேன். பாவங்கள் நிரம்பிய அழிகின்ற, இகலோக அரசர்களைப் பற்றி நான் பாடுவதில்லை", என்று அறிவித்தார்.

கணிகண்ணன் பால் அரசர் பெரிதும் எரிச்சல் கொண்டார்; "எவ்வளவு துடுக்குத்தனம் உள்ளவனாக நீ இருக்கிறாய்! என் பெருமையைப் பாட நீ மறுத்துவிட்டாய். என்னை நீ அவமதித்து விட்டாய். என் நாட்டை விட்டு உடனே வெளியேறு", என்று அவர் கணி கண்ணனுக்குக் கட்டளை இட்டார். கணிகண்ணன், "அரசே! சரி, நான் உமது நாட்டை விட்டு உடனே வெளியேறுகிறேன்", என்று செப்பினார்.

நிகழ்ந்ததைக் கணிகண்ணன் தம் குருநாதரிடம் தெரிவித்தார். கணிகண்ணனோடு தாமும் உடன் செல்ல ஆழ்வார் முடிவு செய்தார். தம்முடன் புறப்பட்டு வருமாறு உள்ளூர்க் கோயிலில் உறையும் தெய்வத்தையும் கேட்டுக் கொண்டார். ஆழ்வாரும் சீடரும் நாட்டை விட்டு அகன்றனர். காமரு பூங்கச்சி மணிவண்ணனும் தன் பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொண்டு ஆழ்வாரையும் கணிகண்ணனையும் பின் தொடர்ந்து அருகில் உள்ள ஒரு சிற்றூருக்குச் சென்றான்.

நாடு தன் செல்வத்தை இழந்தது. தெய்வம் புறப்பட்டுச் சென்று விட்டதனால் எங்கும் சோகம் கவ்வியது. மழை பெய்யவில்லை. துயரத்திற்குரிய காரணம், தாம் கணிகண்ணனை அவமதித்து நாட்டைவிட்டு வெளியேற்றியதே என்பதை அரசர் உணர்ந்துகொண்டார். ஆழ்வாரும் சீடரும் தங்கியிருந்த இடத்திற்குச் சென்று கண்ணீர் பெருக்கித் தம் வருத்தத்தைத் தெரிவித்துக் காஞ்சிக்குத் திரும்பி வருமாறு அழைத்தார். தங்கள் இடத்துக்கு அவர்கள் திரும்பி வந்தனர். ஆழ்வார் இறைவனிடம் தனது கோயிலுக்கு எழுந்தருளுமாறு வேண்டினார். "கணிகண்ணன் போக்கு ஒழிந்தான். யானும் போக்கு ஒழிந்தேன். காமருபூங்கச்சி மணிவண்ணா! நீயும் உன் பைந்நாகப்பாய் விரித்துக் கொள்", என்று தொழுதார். இறைவனும் திரும்பி வந்து கோயிலில் எழுந்தருளினார். நாட்டில் செல்வங்கள் பெருகின. திருக்கோயில் மீண்டும் ஒளி பெற்றது.

பிறகு, ஆழ்வார் குடந்தையில் எழுந்தருளியுள்ள இறைவனை வணங்குவதற்காகப் புறப்பட்டுச் சென்றார். வழியில் அவர் பெரும்புலியூருக்குச் சென்றார். (இது ஒரு வேளை, சிதம்பரமாக இருக்கலாம்). சில அந்தணர்கள் வேதங்களைச் சொல்லிக் கொண்டிருந்தனர். ஆழ்வாரைக் கண்டவுடனே அவர்கள் ஓதுவதை நிறுத்திவிட்டனர். அவர்கள் அவரை அந்தணரல்லாதவர் அல்லது தாழ்த்தப்பட்டவர் என்று கருதினர். ஆனால் பிறகு அவர்கள் ஓதத் தொடங்கியபோது, முன்பு எந்த இடத்தில் நிறுத்தினார்கள் என்பதை ஞாபகப் படுத்திக் கொள்ள அவர்களால் முடியவில்லை. அவர்களுடைய சிரமத்தை ஆழ்வார் உணர்ந்தார். அவர் வழியில் கிடந்த ஓர் உளுந்து தானியத்தை எடுத்து அதை இரண்டாகப் பிளந்தார். இதைப் பார்த்த அந்தணர்கள் தாங்கள் ஓதும்போது விட்ட இடத்தை உடனே நினைவுக்குக் கொண்டு வந்தனர். அதன் தொடக்கம், "கிருஷ்ணம் வ்ரிஹீனம் நகநிர்பின்னேனம்"

(யஜுர் வேதம் - 1.9.) என்பதாம். அந்தணர்கள்", எங்கள் குற்றத்தை மன்னியுங்கள். தாங்கள் பாமரர் அல்ல; தாங்கள் ஓர் மகாத்மா" என்று கூறினர்.

ஆழ்வார் அவ்வூரின் தெருக்களைக் கடந்து சென்று கொண்டிருந்த போது கோயிலில் எழுந்தருளியிருந்த பிரதான தெய்வம் அவர் செல்லும் திசைப் பக்கமெல்லாம் திரும்பி நின்றது. அந்த நேரத்தில் யக்ஞம் செய்து கொண்டிருந்த தீட்சிதருக்கு இது தெரிவிக்கப்பட்டது. தீட்சிதர் ஆழ்வாரை யக்ஞ சாலைக்கு அழைத்துக் கொண்டு வந்து தக்க மரியாதைகளைச் செய்தார். இதைக் கண்ட மற்ற அந்தணர்கள் ஆத்திரமடைந்தனர். அவர்கள் ஆழ்வாரிடம் வெறுப்பைக் காட்டினர்.

அந்தணர்களுக்கு ஒரு பாடத்தைக் கற்பிக்குமாறு தீட்சிதர் ஆழ்வாரை வேண்டினார். ஆழ்வார் தம் உருவத்தில் பகவான் ஹரியின் அற்புதமான காட்சியைக் காட்டினார். அந்தணர்கள் ஆழ்வாரிடம் மன்னிப்பை வேண்டினர்.

ஆழ்வார் குடந்தையை அடைந்தார். ஆழ்வாரின் வேண்டுகோளுக்கு இணங்கிக் கோயிலில் எழுந்தருளி யிருந்த இறைவனாகிய "ஆராவமுதர்" தம் பாம்புப் படுக்கையிலிருந்து பாதியளவு எழுந்து நின்றார். இன்றும் இறைவன் இதே நிலையில் இருக்கின்றான். ஆழ்வாரின் "திருச்சந்தவிருத்தம் என்ற பகுதியில் உள்ள ஒரு பாடலில் இந்த நிகழ்ச்சி குறிக்கப்பட்டுள்ளது.

குடந்தையில் ஆழ்வார் தம் இரண்டு நூல்களைக் காவிரியில் வீசி எறிந்துவிட்டார் அவை; "திருச் சந்தவிருத்த"மும், "நான்முகன் திருவந்தாதி"யும் ஆகும். தாம் இயற்றிய பாடல்களைக் கூட வெளியிட விரும்பாத அளவுக்கு அவர் அகந்தையற்றவராகவும், பணிவுள்ளவரா கவும் இருந்தார். ஆனால் அந்த இரண்டு நூல்களும் ஆற்றின் போக்கை எதிர்த்து நீந்தி மிதந்தவாறு கரைக்கு வந்து சேர்ந்தன.

'திருச்சந்த விருத்தம்'. நூற்றிருபது பாசுரங்களைக் கொண்டதாகும்; 'நான்முகன் திருவந்தாதி' தொண்ணூற்றாறு பாசுரங்களைக் கொண்டுள்ளதாகும்; திவ்ய பிரபந்தத்"தில் இவ்விரு நூல்களும் சேர்க்கப்பட்டுள்ளன; இத்தொகுதியில் ஆழ்வார்கள் அனைவரும் பாடியுள்ள தமிழ் நூல்கள் அடங்கியுள்ளன. திருமழிசை ஆழ்வார் சைவ சமயத்திலிருந்து வைஷ்ணவ சமயத்திற்கு மாறியவராதலால், அவருடைய நூல்களில் மத வைராக்கியம் பற்றிய பக்திப் பாடல்கள் காணப்படுகின்றன.

ஆழ்வார் குடந்தை நகரைத் தமது நிரந்தர உறைவிடமாகக் கொண்டார். அவர் மிகவும் முதிர்ந்த வயதில் மறைந்தார். அவர் தமது யோக சக்தியினால் நான்காயிரத்து எழுநூறு ஆண்டுகள் வாழ்ந்தார் என்று ஐதிகம் கூறுகிறது.

இந்த ஆழ்வார் வழங்கியுள்ள செய்தி; "நாராயணனே பரம்பொருள். அவன் ஒருவனே புகலிடம். இறைவனுடைய திருநாமங்களுக்கு மகத்தான சக்தி இருக்கிறது. மரணத்தின் கடவுளாகிய எமன் தன் தூதுவர்களின் செவிகளில், ஹரி பகவானுடைய பக்தர்களை அணுகவும் கூடாது என்று இரகசியமாகக் கூறுகிறான். எங்கும் பகவானுடைய இருப்பை உணர்க. உன் உள்ளத்தில் அவன் உறைகின்றான். எல்லா நேரங்களிலும் எல்லா நிலைகளிலும் அவன் உன்னைக் காத்து வருகிறான். இறைவனிடம் அன்பு செலுத்துக. சரணாகதி அடைந்து அவனுடைய அருளைப் பெறுக! நீ நிலைத்த பேரின்பத்தையும் அமரத்துவத்தையும் பெறுவாய்" என்பதாம்.

## 9. ஆண்டாள்

விஷ்ணு பகவானின் மனைவியர் மூவருள் ஒருவராகிய பூதேவி என்னும் பூமா தேவியின் அவதாரம் என்று ஆண்டாள் கருதப்படுகிறாள். தெய்வீகக் காதலின் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதற்காக அவள் சிறப்பாக நிலவுலகத்திற்கு அனுப்பப்பட்டாள். தென்னிந்தியாவில் உள்ள இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவள் பிறந்தாள். யாக பூமியின் உழவுச்சாலில் ஜனகமன்னர் சீதையைக் கண்டு எடுத்தது போலப், பெரியாழ்வார் என்று புகழ்பெற்ற விஷ்ணு சித்தர் தமது நந்தவனத்தில் துளசிப் புதருக்கடியில் அவளைக் கண்டு எடுத்தார். கலியுகத்தின் 98-ம் ஆண்டு ஆண்டாள் பிறந்தாள் என்பது ஐதிகம்.

பெரியாழ்வார் குழந்தையை எடுத்துக் கொண்டு சென்று உள்ளூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ள தெய்வமாகிய வடபத்திரசாயியினுடைய திருவடிகளில் கிடத்தி; விலை மதிக்க ஒண்ணா இந்தச் செல்வக் களஞ்சியம் உனக்கே, உன் சேவைக்கே உரியது", என்று கூறினார். அப்போது ஓர் தெய்வீக அசரீரி, "விஷ்ணுசித்தரே! இந்த தெய்வீகக் குழந்தைக்குக் "கோதை" என்று பெயர் சூட்டுக! நீர் பெற்ற குழந்தை போலவே பேணி வளர்ப்பீராக!" என்று தெரிவித்தது. கோதை! என்றால் மலர் மாலை போல் அழகுள்ளவள் என்று பொருள்படும். அரங்கநாதப் பெருமானுடைய காதலன்பையும் அருளையும் அவள் பெற்றமையால் ஆண்டாள்" என்று அழைக்கப்பட்டாள். "அரங்க நாயகி" என்ற பெயரும் அவளுக்கு உண்டு.

ஆண்டாள் புகழ்மிக்க, அழகுமிக்க, வயதுக்கு மீறிய அறிவு மிக்க குழந்தை. அவள் மழலை பேசத் தொடங்கிய போது பகவான் ஹரியின் திருநாமத்தைத்தான் பேசினாள். மற்ற பெண்களைப் போல அவள் விளையாட்டில் ஈடுபடவில்லை. அவள் மலர்களைப் பறித்து இறைவனுக்கு

அணிவிப்பதற்காக மாலைகள் தொடுத்தாள். தன் தந்தையுடன் அவள் நந்தவனத்தில் பணி செய்தாள். இறைவனுடைய பெருமைகளை அவள் புகழ்ந்து பாடினாள். புராணங்களைப் படிப்பதிலும் கேட்பதிலும் அவள் மிக்க மகிழ்ச்சியடைந்தாள்.

ஆண்டாள் திருவரங்கத்து அரங்கநாதப் பெருமானிடம் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தாள். அவருக்காகவே தன் வாழ்வை ஒப்படைத்தாள். அரங்கனையே அவள் எப்போதும் நினைத்தாள். நாயக நாயகி உறவாகிய மதுரபாவத்தின் உச்சியை அவள் அடைந்தாள்.

இறைவனுக்குரிய மலர்மாலையை ஆண்டாள் அணிந்து கொண்டு நிலைக் கண்ணாடியில் தன் அழகைப் பார்த்து வியந்து கொண்டு, "அரங்க நாதப் பெருமான் என்னை ஏற்றுக் கொள்வானா? அவனுடைய காதலைத் தூண்டிவிடும் அளவுக்கு நான் அழகாக இருக்கிறேனா?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்வாள். அவள் நாள்தோறும் இவ்வாறு செய்து வந்தாள். ஒரு நாள் கோயில் அர்ச்சகர் மலர் மாலையில் ஓர் உரோமம் இருந்ததனால் அதை மறுத்துவிட்டார். அன்று பெரியாழ்வார் புதிய மலர்களைப் பறித்து இறைவனுக்காகப் புதிய மாலைகளைத் தொடுத்தார். மற்றொரு நாள், மலர் மாலை சிறிதே வாடிப் போய் விட்டதென்று அர்ச்சகர் குறை கூறினார். இதன் காரணத்தைக் கண்டறியப் பெரியாழ்வார் முயற்சி செய்தார்.

ஒருநாள் பெரியாழ்வார் திரையின் மறைவில் இருந்து கொண்டு தம் மகள் என்ன செய்கிறாள் என்பதைப் பார்த்தார். அவள் புதிய மலர் மாலைகளை அணிந்து கொண்டு, நிலைக் கண்ணாடியின் முன்னால் நின்று கொண்டு, "அரங்கநாதரே? என் இனிய காதலரே! இப்போது என் அழகை நேசிக்கிறீரா?" என்று கேட்டாள். அவள் மிகுந்த மகிழ்ச்சியோடு இருந்தாள். அவளுடைய தந்தை அவரிடம் ஓடிச்சென்று, "என் அன்புச் செல்வியே! நீ

என்ன செய்து கொண்டிருக்கிறாய்? இறைவனுக்குரிய மாலையை நீ மாசுபடுத்திவிட்டாய். இனிமேல், தயவுசெய்து, இப்படிச் செய்ய வேண்டாம்", என்று அன்புடன் கடிந்து கொண்டார்.

பெரியாழ்வார் மீண்டும் புதிய மலர் மாலைகளைத் தொடுத்து இறைவனுக்குப் படைத்தார். அன்றிரவு பெரியாழ்வார் ஒரு கனவு கண்டார். இறைவன் அவருடைய கனவில் தோன்றி, ஆண்டாள் சூடிக் கொடுத்த மலர் மாலைகள் எனக்கு மிகவும் உகந்தவை. அவற்றையே எனக்குப் படைப்பாயாக! அவள் நான் மணக்கப் போகும் புது மணப் பெண்; அவள் பூமாதேவி; மனிதவடிவில் அவதாரம் எடுத்திருக்கிறாள்; அவள் சூடிய மாலைகளையே எனக்குக் கொண்டு வருக!" என்று அறிவித்தார். அன்று முதல் ஆண்டாள் "சூடிக் கொடுத்த நாச்சியார்" என்று அழைக்கப்பட்டாள்; இதன் பொருள், "தான் அணிந்து கொண்ட பிறகு ஆண்டவனுக்கு அந்த மலர்மாலைகளைக் கொடுத்தவள்" என்பதாம்.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளுக்குப் பிருந்தாவனம் ஆயிற்று. மற்ற பெண்களை அவர் கோபியராகக் கருதி அவர்கள் அனைவரையும் கண்ணனை வழிபடுவதற்கு அழைத்தாள். அவளுடைய விளையாட்டுத் தோழியர் கோபியர் ஆயினர். வடபத்ரசாயி கண்ணபிரான் ஆனார், ஆண்டாள் ஒரு கோபியைப் போல இருந்தாள். கோபியைப் போல் அவள் கண்ணனைக் காதலித்தாள். கண்ணனுக்காக அவள் தீவிரமான ஏக்கம் கொண்டாள். தன் தோழியருடன் ஆண்டாள், கண்ணனின் வாழ்விலிருந்து காட்சிகளை நடிப்பது பழக்கம். இத்தகைய காட்சிகளைப் பற்றிய மகிழ்ச்சி தரும் விளக்கங்களை ஆண்டாளின் அழகிய பாசுரங் களாகிய "திருப்பாவை"யும், "நாச்சியார் திருமொழி"யும் வழங்குகின்றன; அவை இனிமையும் வசீகரமும் நிறைந்தவை.

பெரியாழ்வார் ஆண்டாளுக்கு ஒரு மாப்பிள்ளையைத் தம் சமூகத்தில் தேடத் தொடங்கினார். ஆண்டாள் தன் தந்தையிடம், "மானிடரை மணவேன். என் மனம் திருவரங்கத்து அரங்கநாதப் பெருமாளிடம் பதிந்துள்ளது. அவருக்கென்றே என் வாழ்வை நிவேதனம் செய்துள்ளேன். அவரே என் கணவர். அவரே என் பிரபு. அவரே எனக்கு எல்லாம். கண்ணபிரானின் வண்ணக் கரங்கள் மட்டுமே என்னைத் தழுவட்டும், "மானிடவர்க்கன்று பேச்சுப்படில் வாழகில்லேன். நான் அரங்கநாதப் பெருமானைத் தான் மணப்பேன்" என்று கூறினாள்.

பெரியாழ்வார் ஒரு கனவு கண்டார்; அதில் திருவரங்கத்து அரங்கநாதப் பெருமான் அந்தப் புண்ணியத்தலத்துக்கு ஆண்டாளை மணப்பெண் கோலத்தில் அலங்கரித்து அழைத்து வருமாறு அவருக்கு ஆணை தந்தார். திருவரங்கக் கோயில் நிர்வாக அதிகாரிகளும் இதுபோன்ற கனவைக் கண்டனர்.

ஆண்டாள் தன் பதினான்காம் வயதில் திருவரங்கத்துக்கு அழைத்து வரப்பட்டாள். அவள் கருவறையினுள் பெருமான் தன் அரவணையில் இருப்பதைக் கண்டாள். உடனே ஆண்டாள் அவருடன் ஒன்றாய் இணைந்து விட்டாள். அவளுடைய வாழ்வின் விருப்பம் நிறைவேறியது. பகவானிடத்தில் கொள்ளும் பக்தியின் பெருமையை அவள் உலகத்திற்கு எடுத்துக் காட்டினாள்.

ஆண்டாள் தன் ஐந்தாம் வயதிலேயே "திருப்பாவை" எனும் பாடினாள். இதில் மிகுந்த அழகும் வசீகரமும் வாய்ந்த முப்பது பாசுரங்கள் உள்ளன. இன்னொரு தொகுதியில் பத்துப் பத்துப் பாடல்கள் கொண்ட பதினான்கு பகுதிகளாக நூற்று நாற்பத்தி மூன்று பாசுரங்கள் உள்ளன. ஸ்ரீ வைஷ்ணவர்கள் நாள்தோறும் விடியற் காலையில் திருப்பாவையை ஓதுகின்றனர்.

"திருப்பாவை", மார்கழி மாதத்தில் பின்பற்றுப்படும் நோன்பை விளக்குகிறது. இது பாகவதத்தில் வரும் ஒரு கதையை அடிப்படையாகக் கொண்டது. கண்ணபிரானை அடைவதற்காகக் கோபியர் காத்யாயனிதேவியை வேண்டி இந்த நோன்பை இயற்றினர்.

"நாச்சியார் திருமொழி" ஆண்டாள் இறைவன்பால் கொண்ட பக்தியைச் செப்புகிறது. கண்ணபிரானைக் காணவேண்டும் என்ற தன் ஏக்கத்தை அவள் மன்மதனிடம் முறையிடுகிறாள். அவள் குயிலின் காலடியில் வீழ்கிறாள். அவள் மேகத்தைத் தூதுவிடுகிறாள். அவள் கண்ணனைக் கனவில் கண்டு களிக்கின்றாள். கண்ணனின் இருப்பிடத்திற்குத் தன்னை அழைத்துச் செல்லுமாறு அவள் தன் தந்தையையும் உறவினர்களையும் வேண்டுகின்றாள். முடிவில் இறைவன் தோன்றி அவளை ஏற்றுக் கொள்ளுகின்றான். இத்தொகுதியின் ஒரு பதிகத்தை ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருமணங்களின் போது பாடுகின்றனர்.

ஆண்டாள் மற்ற பெண்களைக் கோபியராகக் கருதி அவர்கள் அனைவரையும், கண்ணனைத் தொழுவதற்கு அழைக்கிறாள்.

"பள்ளி எழுவீர்! ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்! பறவைகள் பாடல் பாடத் தொடங்கிவிட்டன. கோயில் சங்கு முழங்குகின்றது. இவ்வோசையை நீர் கேளீரோ? தாயர் தயிர் கடையும் மத்தொலி கேளீரோ? நும் செவி, செவிடோ? மின்னும் யமுனைத் துறையில் படிந்து நீராடிக் கண்ணபிரானைக் கண்டு தரிசிக்க வாரீர்! தேவகியைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை, பிருந்தாவனத்தில் குழலூதி மயக்கும் மாயவனைப் புத்தம் புது மலர்களைத் தூவி வணங்குவோம். வாரீர்! துயில் நீத்து வாரீர்! பாவையரே! உறங்கினது போதும்! தாமரை பூங்கதவம் திறந்தது! நீவிரும் மணிக்கதவம் தாள் திறவீர்!". "இன்னுமா உறங்குகின்றீர்! கண் படைத்த பயனே, கண்ணனைக் காண்பதன்றோ! காணாவிடில் கண்கள் அவம் அன்றோ! விரைவீர்! பிரம்ம ஒரை நழுவிப் போய்விடும். இறை வனுடைய புகழை வாயினால் பாடவும் மனத்தினால்

சிந்திக்கவும், தூமலர் தூவித் தொழவும் இதுவன்றோ தகுந்த நேரம்!"

ஆண்டாள் இறைவனிடம், "உனது இனிய புனித சன்னிதானத்துக்கு நாங்கள் வந்துள்ளோம்! பெருமானே! எங்களின் இதயத் தாமரையில் நீ கொலு வீற்றிருப்பாயாக! உன்னையே என்றும் நினைப்போமாக! எங்கள் உள்ளத்தில் தெய்வீகச் சுடர் விளக்கு அசையாது ஒளி வீசுவதாக! கோவிந்தா? உன் கருணைப் பார்வை எங்கள் மீது படட்டும். ஜனார்த்தனா! நாங்கள் எப்போதும் உனக்கே சேவை செய்வோமாக! உன் பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்! அச்சுதா! உன் உள்ளத்தில் நாங்கள் என்றென்றும் உறைவோமாக! எங்கள் மனங்கள் உன் புண்ணியப் பொற்கமல பாதங்களில் கட்டுண்டு இருப்பனவாக! கேசவா! மற்றை நம் காமங்கள் மாற்று! உனது திருநாமமே எங்களின் உதடுகளில் எப்போதும் ஒலிக்கட்டும்! மாதவா!

"மூவுலகங்களையும் அளந்த உன் ஈரடிகளை யோகியர் தொழுகின்றனர்; அவற்றின் புகழ் ஓங்குக! பக்த பிரகலாதனைக் காக்கவும், இரக்கமற்ற இரணியனது நெஞ்சைப் பிளக்கவும் கர்ச்சனை செய்தவாரே தூணிலிருந்து புறப்பட்ட சிங்க ஏறே! உனது புகழ் ஓங்குக! காளிங்கனது தலையில் நர்த்தனம் செய்த கோபாலா! உனது புகழ் ஓங்குக! ராசலீலைக் கூத்தாடி உருவங்கள் பலவாகும் கோபியரை ஏங்காதவாறு மகிழ்வித்த மாயயோகியே! உனது புகழ் ஓங்குக!"

ஆடிமாதத்தில் தென்னிந்தியாவில் உள்ள வைஷ்ணவத்திருக்கோயில்கள் பலவற்றிலும் ஆண்டாளின் திருமண வைபவம் மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது.

பூமித் தாயாகிய பூதேவி ஆண்டாளின் புகழ்பெருகுக! அவளைப் போற்றிப் பணிவோமாக! அவளுடைய நல்லாசிகள் நம் அனைவர் மீதும் பொழிவனவாகுக!

## 10. அருள் ஞானி ஆளவந்தார்

பன்னிரண்டாம் நூற்றாண்டில் பாண்டிய மன்னன் மதுரையை ஆண்டு வந்தான். அது தமிழ்க் கல்வியின் இருப்பிடம். மன்னன் கல்வியின் பெரும் புரவலன். அரசியும் பெரும்புலமை பெற்றிருந்தாள்.

வித்யா ஞான கோலாகலர் புகழ்பெற்ற பண்டிதர். அரசன் அவரை ஆதரித்து வந்தான். கோலாகலர் பண்டிதர்களுக்கு அச்சத்தை விளைவிப்பவராக இருந்தார். அவர் மிகுந்த அகந்தையும் ஆணவமும் வாய்ந்தவர். கற்றறிந்த மற்ற அறிஞர்களிடமிருந்து அவர் கட்டாயமான கப்பம் பெற்று வந்தார். அவரைத் தட்டிக் கேட்க யாரும் துணியவில்லை. அவர் கொடூரமான உள்ளம் படைத்தவர். அவர் எங்கும் பல்லக்கில் சென்று வந்தார். பலர் அவரைத் தொடர்ந்து சென்றனர். அவருடைய புலமையை அவர்கள் பறை சாற்றினர். எந்தப் பண்டிதராவது கோலாகலருக்குச் செலுத்த வேண்டிய கப்பங்களை நிலுவை வைத்திருந்தால் கோலாகலர், அவரிடம் மிகவும் கடுமையாக நடந்து கொள்ளுவார்.

உண்மையான ஞானம் பெற்ற பண்டிதருக்கு இவைகள் அடையாளங்கள் அல்ல. கலை ஞானம் உள்ளத்தில் அகந்தையையும் தற்பெருமையையும் புகுத்துகிறது; ஆணவத் திமிர் வலுக்கின்றது. அகந்தை வீழ்ச்சிக்கு விரைவில் வழி கோலுகின்றது.

பாஷ்ய ஆச்சாரியர் அடக்கமுள்ள எளிய ஆசிரியர். கோலாகலரின் செயலாளராகிய இராம சாஸ்திரி, பாஷ்ய ஆச்சாரியாரின் பள்ளிக்கு வந்தார். பாஷ்ய ஆச்சாரியார் அன்று வரவில்லை. இராம சாஸ்திரி, யமுனன் என்ற சிறுவனிடம்; இன்று பண்டிதர் கோலாகலரிடம் கப்பத்துடன் வருமாறு உன் ஆசிரியரிடம் கூறு." இன்று அவர் வரவில்லை என்றால் விளைவு விபரீதமாகிவிடும்", என்று

கட்டளையிட்டார். சிறுவன், "அகந்தையும் தற்பெருமையும் உள்ள முட்டாள்களுக்கு எங்கள் ஆசிரியர் ஒரு தம்பிடி கூடத் தரமாட்டார். உன் பண்டிதர் கோலாகலரிடம் போய் இதைத் தெரிவி", என்று விடை கூறினான்.

யமுனனின் துடுக்குத்தனமான பதிலைக் கேட்டதும் கோலாகலர் வெகுண்டார். பாஷ்ய ஆச்சாரியாரை அவர் வாதுக்கு அழைத்தார். பாஷ்ய ஆச்சாரியார் அச்சமுற்றார். யமுனன், "வணக்கத்திற்குரிய குருவே! எந்த வாது நிகழ்ச்சியிலும் உங்களின் மாணவன் எதிர்த்து வாதாடுவான் என்று அந்தக் கோலாகலரிடம் சொல்லுங்கள். அவருடைய தற்பெருமையை நசுக்கி உங்களுக்கு அழியாத புகழை ஈட்டித் தருவேன்", என்று கூறினான். பாஷ்ய ஆச்சாரியார் நம்பிக்கை இன்றி அச்சத்துடன் இசைந்தார்.

யமுனன் பாண்டிய மன்னனின் அவைக்குச் சென்று பண்டிதர் கோலாகலரின் முன்னால் துணிச்சலுடன் இருக்கையில் அமர்ந்தான். பண்டிதரிடம் சிறுவன் தோல்வியடைவான் என்று மக்கள் அனைவரும் நினைத்தனர். மன்னனுக்கும் அதே எண்ணம் இருந்தது. ஆனால் சிறுவனுடைய வெற்றியைப் பற்றி அரசி மிகவும் உறுதியாக இருந்தாள். அவள் மன்னனிடம், "சிறுவன் பண்டிதரை வெற்றி கொள்ளவில்லையென்றால் நான் உங்களுக்கு அடிமையாவேன்", என்று கூறினாள். அரசன், "சிறுவன் வெற்றி பெற்றால் எனது நாட்டில் பாதியை அவனுக்குக் கொடுப்பேன்", என்று தெரிவித்தான்.

வாக்குவாதம் தொடங்கியது. பண்டிதர் சிறுவனிடம் சில சிக்கலான கேள்விகளைக் கேட்டார். சிறுவன் சரியான விடைகளைக் கூறினான். பண்டிதர், "துடுக்குத்தனம் உள்ள சிறுவனே! நீ விரும்பும் எந்தக் கேள்வியையும் கேள். நான் விடை கூறுவேன்", என்று தெரிவித்தார்.

யமுனன், "பண்டிதரே! உங்கள் தாயார் மலடி அல்ல என்றும், அரசர் நற்குணம் உள்ளவர் என்றும், அரசி

கற்புள்ளவர் என்றும் நான் கூறுகிறேன். முடிந்தால் இதை மறுத்துக் கூறுங்கள்", என்று அறிவித்தான். பண்டிதர் இக்கட்டான நிலையில் இருந்தார். அவரால் எந்த விடையையும் சொல்ல முடியவில்லை.

அரசன், "யமுனா! இப்போது நீயே இக்கூற்றுக்களை மறுத்துப் பேசு!" என்று பணித்தான்.

யமுனன், "தனி மரம் தோப்பு ஆகாது. ஒரே மகன் மக்கட்பேறு ஆகமுடியாது. பண்டிதரின் தாயார் ஒரே மகனைத் தான் பெற்றார். எனவே அந்த அம்மையார் மலடி என்று தான் கருதப்படுவார். அரசர் தம் குடிமக்களின் பாவங்களில் பங்கு கொள்பவர். ஆதலால் அவர் பூரண நற்குணம் உள்ளவராக முடியாது. ஒரு பெண் முதலில் அக்கினிதேவனுக்கும், வருணதேவனுக்கும், இந்திர பகவானுக்கும் நிவேதனமாக வழங்கப்படுகிறாள்; பிறகு தன் கணவனுக்கு நிவேதனம் ஆகிறாள். ஆதலால் அரசி கற்புள்ளவர் அல்ல! என்று விடை பகர்ந்தான்.

பண்டிதர் அவமானத்தால் வெட்கித் தலைகுனிந்தார். இளம் மேதையை அவையோர் பாராட்டினர். அரசன் யமுனனின் உயர்ந்த கூர்ந்த பகுத்தறிவைப் புகழ்ந்து தன் நாட்டில் பாதியை அவனுக்குத் தந்தான். அரசி அவனை, "ஆளவந்தார்" - ஆட்சி செய்ய வந்தவர், என்று அழைத்தாள்.

யமுனன் அரசன் ஆனான். பண்டிதர் கோலாகலர் அவனுக்குப் பணியாளராக ஆனார். பாஷ்ய ஆச்சாரியார் அளவற்ற ஆனந்தம் அடைந்தார். யமுனன் நாட்டை நேர்மையோடும் அறிவோடும் ஆட்சி செய்தான். அவன் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டினான்.

பெரும் பக்தராகிய நாதமுனிகளின் பேரர், ஆளவந்தார். அவருடைய பத்தாம் வயதில் தம் தந்தையை இழந்தார்.

நாதமுனிகள் ஆளவந்தாரைத் திருவரங்கத்தில் உள்ள அரங்கநாதப் பெருமானின் சேவைக்காக ஒப்படைத்தார்.

மணக்கால் நம்பி, நாதமுனிகளின் சீடர். அவர் பக்தரும், சிறந்த அறிஞரும் ஆவார். ஆளவந்தார் சிறு குழந்தையாக இருந்த போது நாதமுனிகள் காலமடைந்தார். நாதமுனிகள் தம் கடைசி சொற்களை மணக்கால் நம்பியிடம், "அன்புள்ள நம்பி! நான் வாழ்நாள் முழுதும் மதித்துப் போற்றி வந்த பெருஞ்செல்வத்தை என்பேரனுக்கு அவன் தக்க வயதை அடையும்போது காட்டு. அது விலைமதிக்க முடியாத பெருஞ்செல்வம். ஆளவந்தாருக்கு நான் விட்டுச் செல்லும் செல்வச் சாசனம் இது. அரங்க நாதப் பெருமானுடைய சந்நிதியில் அவன் அதைக் கண்டு கொள்ளட்டும்", என்பவையாம்.

அரச போக வாழ்க்கையில் அரசர் ஆளவந்தாருக்கு மன நிறைவு ஏற்படவில்லை. அவர் ஆன்மாவின் உள்முக, நீடித்த அமைதிக்காக ஏங்கினார். பகைவர்களின் மீது போர் தொடுப்பதற்காக அவருக்கு ஏராளமான பணம் தேவைப்பட்டது. இந்த இக்கட்டான வேளையில் மணக்கால் நம்பி மதுரைக்கு வந்தார். அவர் ஆளவந்தாரின் மனத்தை மாற்றவும், தம் குருவாகிய நாதமுனிகளின் செய்தியை அவருக்கு அறிவிக்கவும் விரும்பினார். ஆளவந்தாருக்கு உணவு சமைக்கும் சமையல்காரனை அவர் அணுகினார். ஓர் இனிய மூலிகையின் திவ்விய அமிர்தப் பொடியை அவனிடம் நாள்தோறும் தந்து, "இதைக் காய்கறிகளுடன் சேர்த்துக் கலந்து விடு. அரசர் உண்டு மிகுந்த மகிழ்ச்சியை அடைவார்", என்று கேட்டுக் கொண்டார். அவ்வாறே சமையல்காரனும் செய்து வந்தான். ஆளவந்தார் காய்கறிகளைப் பெரும் அளவில் விரும்பினார். ஒரு நாள் நம்பி மூலிகையைக் கொண்டு வரவில்லை. அன்று ஆளவந்தார் காய்கறிகளை விரும்பி உண்ணவில்லை.

ஆளவந்தார் சமையல்காரனிடம், "காய்கறிகள் இன்று ஏன் சுவையாக இல்லை?" என்று கேட்டார். சமையல்காரன், "பெருமானே! பக்தர் இன்று மூலிகையைக் கொண்டு வரவில்லை", என்று தெரிவித்தான். ஆளவந்தார் "எந்த பக்தர்?" என்று கேட்டார். சமையல்காரன், "ஒரு பக்தர் மூலிகையைக் கொண்டு வந்து இதைக் காய்கறிகளில் கலந்து அரசருக்குப் பரிமாறு, என்று கேட்டுக் கொள்வதாகத் தெரிவித்தான். ஆளவந்தார், "அந்த பக்தரை என்னிடம் அழைத்து வா", என்று பணித்தார். சமையல்காரன் அரசர் முன்னிலைக்கு மணக்கால் நம்பியை அழைத்து வந்தான்.

ஆளவந்தார், "பக்தரே! உங்களின் மூலிகை என் நாவை மட்டும் அன்று, என் ஆன்மாவையும் மகிழ்வித்தது. நான் உங்களுக்கு நன்றிக் கடன்பட்டுள்ளேன். அன்புகூர்ந்து என்னிடம் ஏதேனும் சலுகையைக் கேளுங்கள். நான் உங்களுக்குப் பெரிய நிதியைத் தருவேன்", என்று கூறினார்.

நம்பி, "அரசே! நான் தங்களிடம் எந்த நிதியையும் பெறுவதற்காக வரவில்லை. அதற்கு நேர்மாறாக, நான் தங்களுக்கு ஒரு பெரிய செல்வக் களஞ்சியத்தைக் காட்டுவதற்காக வந்திருக்கிறேன்; அது செல்வங்கட்கெல்லாம் பெருஞ்செல்வம்; அதற்குத் தாங்கள் வாரிசாக இருக்கிறீர்கள்", என்று இயம்பினார்.

ஆளவந்தார், "அந்தச் செல்வம் எது? நான் எப்படி அதற்கு வாரிசு? அந்தச் செல்வம் எங்கே இருக்கிறது? ஒரு போரின் நிமித்தம் எனக்குப் பணம் மிகவும் தேவையாக உள்ளது", என்று கேட்டார்.

நம்பி, "அரசே! நான் சொல்வதை மிகவும் கவனமாகக் கேளுங்கள். நாதமுனிகள் தங்களின் பாட்டனார். நான் அவரிடம் பக்தி பூண்ட சீடன். அவர் இறக்கும் நேரத்தில், செல்வங்கட்கெல்லாம் பெருஞ் செல்வமாகிய அந்தச் செல்வக் களஞ்சியத்தை என்னிடம் ஒப்படைத்தார்", என்று செப்பினார்.

ஆளவந்தார், "வணக்கத்திற்குரிய பக்தரே! என் பாட்டனார் உண்மையிலேயே என் பால் மிகவும் அன்புள்ளவர். அவர் எனக்கு மிகப் பெரிய செல்வ நிதியை வழங்கியுள்ளார். எனக்கு இப்போது அந்தச் செல்வம் உண்மையில் தேவைப்படுகிறது. விலை மதிக்க ஒண்ணாத அந்தக் களஞ்சியம் இருக்கும் இடத்தை அருள்கூர்ந்து தெரிவியுங்கள்", என்று வேண்டினார்.

நம்பி, "அந்தச் செல்வ நிதி இரண்டு ஆறுகளுக்கு நடுவே உள்ளது. ஒரு பெரிய பாம்பு அதைக் காத்து வருகிறது. அந்தச் செல்வத்தைக் கைப்பற்றுவதற்கு ஒரு மந்திரம் உள்ளது. அந்தச் செல்வத்தைத் தாங்கள் அடைந்தால், உண்மையில் எல்லாம் அடைந்தவர் ஆவீர்கள். தங்கள் விருப்பங்கள் யாவும் நிறைவேறும். அதை அடைவதற்குத் தங்களிடம் தூய அன்பும் மனோதிடமும் வேண்டும்", என்று அறிவித்தார்.

ஆளவந்தார், "பக்தரே! வாருங்கள், அந்தச் செல்வக் களஞ்சியத்தை எனக்குக் காட்டுங்கள். வணக்கத்திற்குரிய என் பாட்டனாரின் பெயரால் நான் அதை நிச்சயம் எனக்கு உரிமையாக்கிக் கொள்வேன். அதைப் பெறுவதற்கான தூய அன்பும் மனோதிடமும் எனக்கு நிச்சயம் உள்ளன", என்று கூறினார்.

நம்பி, "உலகப் பொருள்களினிடத்து உள்ள பற்றுக்கள் எல்லாவற்றையும் விட்டொழித்து, என்னைப் பின்பற்றி வாருங்கள். ஆழ்ந்த மன ஒருமையும், கொழுந்து விட்டெரியும் ஆர்வமும், தீவிர நம்பிக்கையும் கொள்ளுங்கள். அந்தச் செல்வக் களஞ்சியத்தை இப்போது அடைவீர்கள்", என்று தெரிவித்தார்.

ஆளவந்தார், பொறுப்புள்ள அதிகாரிகளிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு அந்தச் செல்வக் களஞ்சியத்தைத் தேடி அடைவதற்காக நம்பியுடன் புறப்பட்டார். நம்பி, பகவத்கீதையை மிகுந்த பக்திசிரத்தை யுடன் பின்பற்றுபவர். கீதையின் பதினெட்டு அத்தியாயங்

களையும் அவர் நாள்தோறும் படித்து வந்தார். ஆளவந்தார் கீதையை நம்பிக்கையுடனும், முழு கவனத்துடனும் கேட்டு வந்தார். இது அவருடைய மனத்தைத் தூய்மைப்படுத்தியது. ஆளவந்தார், "வணங்கத்தக்க பக்தரே! தாங்கள் என் குரு. கீதையின் உண்மையான தத்துவத்தை எனக்கு ஆரம்பித்துக் கொடுங்கள். கீதாம்ருதத்தைப் பருகுவதற்கு நான் மிகவும் ஆவலாக இருக்கிறேன்", என்று வேண்டினார். நம்பி ஆளவந்தாருக்குக் கீதையின் உண்மையான சாரத்தைப் பருகக் கற்றுக் கொடுத்தார்.

ஆளவந்தார் கீதையின் தியானத்தில் மூழ்கித் தம்மையே மறந்தார். அவர் பின்வருமாறு சிந்தித்தார். "இந்த அரசாட்சியால் என்ன பயன்? நாட்டை ஆள்வதில் எனக்கு மன நிம்மதியே இல்லை. இன்று வரை என் வாழ்வை வீணாக்கிவிட்டேன். இந்தச் சிறந்த பக்தரால் என் கண்கள் திறக்கப்பட்டுவிட்டன. எது உண்மை, எது பொய் என்பதை இப்போது தெரிந்து கொண்டேன். கீதையில் பரந்த செல்வம் அடங்கியுள்ளது. கீதையைப் படிப்பதனால் என் மனம் அமைதி பெறுகிறது. இந்தப் பக்தரின் கூட்டுறவால் நான் ஆறுதல் காண்கிறேன். அவர் எனக்குப் பிரியமானவர். இறைபணிக்காக என் வாழ்வை ஒப்படைப்பேன். இறைவனில் நான் வாழ்வேன். மூவுலகங்களையும் ஆளும் இறைவனிடம் முழுமையாகச் சரணாகதி அடைவேன். அரச போக வாழ்க்கை வீண் டம்பம் நிறைந்தது. அரியாசனத்தில் வீற்றிருக்க நான் விரும்பவில்லை. இறைவன் என் இதயத்தை அரியாசனமாகக் கொண்டு அங்கே வீற்றிருக்கட்டும். உலகச் செல்வம் எதுவும் எனக்கு வேண்டாம். அவை எல்லாம் உடைந்த கண்ணாடித் துண்டுகள். "இவ்வாறு சிந்தித்த ஆளவந்தார் நம்பியிடம்," குருநாதரே! செல்வங்கட்கெல்லாம் மிகப் பெரிய செல்வக் களஞ்சியத்தை அடைவதற்கான வழியைக் காட்டுங்கள்", என்று கேட்டுக் கொண்டார்.

ஆளவந்தாரின் மனம் நிறை தூய்மை அடைந்து விட்டதை நம்பி கண்டு கொண்டார். அவர், "அரசே! அச்செல்வம் நிலையாக இருப்பது. இப்போது என்னைப் பின்பற்றி வாருங்கள். அந்தச் செல்வத்தை உங்களுக்குக் காட்டுகிறேன்", என்று தெரிவித்தார்.

இருவரும் திருவரங்கத்துக்கு வந்தனர். அவர்கள் அரங்கநாதப் பெருமானின் கோயிலுக்குள் நுழைந்தனர். பூஜை நடந்து கொண்டிருந்தது. அந்தணர்கள் வேதங்களைச் சொல்லிக் கொண்டிருந்தனர். பக்தர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களைப் பாடிக் கொண்டிருந்தனர். அர்ச்சகர் ஆரத்தி காட்டிக் கொண்டிருந்தார். அப்போது நம்பி ஆளவந்தாரிடம், "இப்போது பாருங்கள். இது செல்வங்கட்கெல்லாம் பெருஞ்செல்வம்; இதுவே உங்களின் பாட்டனார் உங்களுக்குச் சாசனம் செய்து வைத்துள்ள சொத்து. காவிரி பிரிந்து இரண்டு ஆறுகளாகச் செல்லுகிறது; அவற்றின் நடுவே உள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள அரங்கனே இந்தச் செல்வம், ஆதிசேடன் அதைக் காத்து வருகிறான். அதை இப்போது உரிமை ஆக்கிக் கொள்ளுங்கள். செல்வத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் மனமாற அனுபவியுங்கள். அதை அடைவதற்குரிய மந்திரம், "ஓம் நமோ நாராயணாய"; என்று அறிவித்தார்.

தெய்வீகப் பேரானந்தத்தில் மூழ்கிய ஆளவந்தார் தம்மையே மறந்தார். தம் நாட்டைப் பற்றிய எல்லாவற்றையும் அவர் மறந்தார். அவர், "நான் பக்தி மிகுந்த என் பாட்டனாருக்கு நன்றிக் கடன்பட்டுள்ளேன்; அவர் எனக்கு இத்தகைய விலைமதிக்க ஒண்ணா அரிய நிதியத்தை எனக்குச் சாசனம் செய்து வைத்துள்ளார். குருநாதரே! நான் தங்களை வணங்குகிறேன். செல்வங்கட்கு எல்லாம் பெருஞ்செல்வமாகிய இதனை அடைவதற்கான வழியைத் தாங்கள் எனக்குக் காட்டியிருக்கிறீர்கள். ஹரிபகவானே! நான் உன்பால் சரண் புகுகின்றேன். நீயே என் பாதுகாவலன்; என் ஒரே புகலிடம், மீண்டும் மீண்டும்

உன்னைப் பணிந்து வணங்குகின்றேன். நின் தாமரைத் திருவடிகளில் பக்தி பூண்டிருப்பதே பெருஞ்செல்வம். என் விருப்பங்கள் யாவும் மறைந்தன. இப்போது நான் மன நிம்மதி பெற்றுள்ளேன். புறத்தே ஒரு போரைச் செய்வதற்காக நான் ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தேன். ஆனால் உண்மையான பகைவர்கள் - காமம், பேராசை, சினம், அகந்தை, பொறாமை, செருக்கு ஆகியவை என் உள்ளத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். "ஓம் நமோ நாராயணாய!" என்ற சக்திமிகுந்த உனது மந்திரத்தால் அவர்களைக் கொன்றுவிட்டேன். விலை மதிப்பற்ற செல்வக் களஞ்சியத்தை என் குருவாகிய நம்பி எனக்குக் காட்டியுள்ளார். நீயே எனது நிலையான, வற்றாத பெருஞ்செல்வம். உலகச் செல்வம் நிலையாமையை உடையது. அது மதிப்பற்றது. நீ என் உள்ளத்தில் உறைகின்றாய். நீயே என் உயிர், நீயே என் வாழ்வு, நீயே எனக்கு எல்லாம்", என்று உரைத்தார்.

ஆளவந்தார் திருவரங்கத்தில் குடி ஏறினார். அவர் அரங்கநாதப் பெருமானை வழிபடுவதிலும், ஜெபம், கீர்த்தனை, தியானம் செய்வதிலும் தம் வாழ்நாட்களைக் கழித்தார்.



